# காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள்



தமிழாக்கம்

இரா. பேபி வேகா இசையமுது




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள்

தமிழாக்கம்

முனைவர் இரா. பேபி வேகா இசையமுது




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

டாக்டர் சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : டாக்டர் சிவந்தி ஆதித்தனார், அதிபர், தினத்தந்தி)
வரிசை எண் : 20

---

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Kāmanvelt nāṭukaḷin kavitaikaḷ<br>**(Poems of Common Wealth Countries)** |
| Author | : | Dr. R. Baby Vega Isaiyamudhu<br>Lecturer, Dept. of English<br>Presidency College<br>Chennai - 600 005 |
| General Editor | : | Dr. K.A. Gunasekaran<br>Director<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 670 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xxiv+200 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 100/- (Rupees One hundredOnly) |
| Printed by | : | United Bind Graphics<br>43/95, Millers Road<br>Kilpauk, Chennai - 600 010. |
| Subject | : | Translation of Common Wealth Countries Poetry in Tamil |



---

**பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

காமன்வெல்த் நாடுகளின் கவிஞர்களுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட சில கவிதைகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவை இங்கு நூல் வடிவம் பெற்றுள்ளன. ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா, கனடா, இந்தியா, சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, பாகிஸ்தான், மேற்கிந்தியத் தீவுகள் என நாடுகள் இங்குக் கவனங்கொள்ளப்பட்டுள்ளன.

இந்நிறுவனம் இந்நூலை வெளியிடுவதில் மிகுந்த பெருமை கொள்கிறது. உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடத்திய பின் இந்நூல் வெளிவருகிறது,

**பிறநாட்டுச் சாத்திரங்கள் தமிழில் கொணரவேண்டும்** எனும் பாரதியின் வழிநின்று இப்பணி நடந்தேறியுள்ளது.

மொழிபெயர்ப்புக் கலை என்பது தனிக்கவனம் கொள்ளப்பட வேண்டிய ஒரு துறையாகும். சங்கத்தமிழ் நூல்கள் அனைத்தும் பல்வேறு உலக மொழிகளில் மொழிபெயர்ப்புச் செய்திடவேண்டும் எனும் கொள்கை கொண்டுள்ள இந்நேரத்தில் பல நாட்டுக் கவிஞர்களின் கவிதைகளைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடப்பெறும் இந்நூலில் அருமை என்றும் தேவைப்படக் கூடிய ஒன்றாகும். நமது தமிழ்க் கவிதைகள் எத்தன்மை வாய்ந்தவை என நாம் ஒப்பீடு செய்து கொள்ளவும் தொடர்ந்து பல தரமான கவிதைப் படைப்புகளைக் கொண்டு வர வேண்டும் எனும் முனைப்பையும் இந்நூல் உருவாக்கும் எனும் நம்பிக்கை எமக்குண்டு.

இந்நூலாசிரியர் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமை வாய்ந்தவர் என்பதை இவரது மொழிபெயர்ப்பில் உருப்பெற்றுள்ள பல நாட்டவர் களின் கவிதைகளைத் தமிழில் மொழிபெயர்த்திருக்கும் நிலையிலிருந்து கணிக்க முடிகிறது. இந்நூலில் மொழிபெயர்ப்புக் கலை குறித்தளித்த, உரை ஓர் ஆய்வுரையாகவே உள்ளது. பல கவிஞர்களின் முகங்களையும் முகவரி களையும் நமக்கு அறிய அவர் தந்திருப்பது பாராட்டுக்குரியதாகும். ஆஸ்திரேலியக் கவிதை,

***Walk in laughter***
***walk in rhythm***
***walk tall***
***walk free***
***walk naked***
***Let the roots of your mother land caress your body***
***Let the naked skin absorb the home sun and shine abony***

*(செகேயே காப்ரேமெதின்)*

*சிரிப்பில் நட*
*தாளத்தில் நட*
*நிமிர்ந்து நட*
*சுதந்திரமாக நட*
*நிர்வாணமாக நட*
*உன் தாய்மண்ணின் வேர்கள்*
*உன் மேனியைத் தழுவிக் கொஞ்சட்டும்*
*வெற்று மேனியின் மேல்தோல்*
*தன் நாட்டுச் சூரியனை உறிஞ்சிக்*
*கறுப்பாக மிளிரட்டும்*

என மொழிபெயர்த்துள்ளதில் காணப்படும் எளிமைத் தன்மை, உள்வாங்கிக் கொண்டு மொழிபெயர்த்துள்ள திறன், கவித்துவத் தன்மை, குறையாது மொழிபெயர்த்துள்ளமை சிறப்புக்குரியதாகும்.

மூச்சு எனும் தலைப்பில் உள்ள கவிதை ஆப்பிரிக்க நாட்டுக் கவிஞர் பி. ராகோடியோஸ் உடையது. பேராசிரியரும் மொழிபெயர்ப் பாளருமான திருமதி முனைவர் இரா. பேபி வேகா இசையமுது அவர்கள்,

*சொல்லப்படும் வார்த்தைகளை விடப்*
*பொருட்களை அதிகம் செவியுறு*
*நீரின் குரல் பாட்டிசைக்கிறது*
*நெருப்பு ஓலமிடுகிறது*
*கானகத்தின் பெருமூச்சுக்கான காற்றே*
*இறந்தோரின் மூச்சு*

என மொழிபெயர்த்து நம்மை உள்ளூற உணர்ந்திடச் செய்துள்ளார்.

கனடா நாட்டுக் கவிஞர் பாரதி லிவ்சே என்பவரது கவிதையில்

**One unit, as a tree or stone**
**Woman in man, and man in womb.**

**ஒரே ஏகம்**
**ஒரு மரம் அல்லது கல்**
**ஆணில் பெண், கருவறையில் ஆண்**

என மொழிபெயர்த்துள்ளதின் மொழி ஆளுமையைக் கண்டுணர முடிகிறது. One unit என்பதை ஒரு கூறு, ஓர் அணு, ஓர் அலகு எனப் பலவாறு மொழிபெயர்த்திருக்கலாம். மாறாக 'ஒரே ஏகம்' எனத் தேர்ந்தெடுத்த பொருத்தமான சொல்லைக் கவித்துவ நடையிலேயே தந்திருப்பது பொருத்தமாக அமைந்துள்ளது.

**உலகம் ஒரு வெல்வெட் ஆடைப் பெண்**
**காற்று மது நிறைந்ததாயுள்ளது**

என மொழிபெயர்த்துள்ளமை

**சொற்கள் வெறும் சொற்கள்**
**தம்மையன்றி**
**அவை**
**தனித்துவம் கொண்டவை அல்ல**

என முறையே ஷா நெய்ல்சனது ஆஸ்திரேலியக் கவிதையையும் மலேசிய சிங்கப்பூர் கவிஞரான எட்வின் தம்பூ கவிதையையும் மொழிபெயர்த்துள்ளமை வழியே தொல்காப்பியர் கூறும் மரபு வழியை உணர்ந்து மொழியாக்கம் உரைநடைத் தன்மையிலமைந்துவிடாமல் கவித்துவத் தன்மையில் செய்திருக்கும் கவிஞர்

**மரபுநிலை திரியா மாட்சிய ஆகி** (தொல். 1593)

தொல்காப்பியரை வழிகொண்டுள்ளார் எனப் பெருமிதம் கொள்ள முடிகிறது.

Dialogue with Lee San எனும் அகமது அலியின் கவிதையைத் தமிழில் கவிதையாக மொழியாக்கம் செய்துள்ளமையை வாசிக்கும்போது தனி நடிப்புக்கான காட்சிகள் மனத்திரையில் படிமங்களாக உதயமாகின்றன.

பத்தாவது நிலவின் பத்தாவது இரவில் மேலை ஏரி அருகே நடக்கையில் இன்னொரு என்னைச் சந்திக்கிறேன் என்ற தலைப்பிட்டுள்ள பேபி வேகா இசையமுது அவர்கள் பின் நவீனத்துவத் தத்துவத்தையும் உள்வாங்கியுள்ளவர் என நம்பிக்கை கொள்ள வைக்கிறது.

சிறீலங்கா கவிஞர் கிர்பால் சிங் என்பவரது கவிதையைத் தமிழில் மொழியாக்கித் தந்துள்ள வரிகளை வாசிக்கும்போது, தொலைந்துபோன, அழிந்து காணப்படுகின்ற எம் இலங்கைத் தமிழ் மண் நினைவில் பதிகிறது. இன்னும் கம்பி வலை முகாம் வளையங்களில் சுதந்திரமற்று ஏங்கும் எம் தமிழ் அகதிகளின் இடங்கள் மற்றும் முகங்கள் நினைவுக்கு வருகின்றன. கவிஞர்

வேறு ஒரு சுயவாழ்க்கையை எண்ணி எழுதியிருப்பினும் தமிழில் இன்று மொழிபெயர்த்து வாசிக்கும் நமக்கு வேறுபொருள் தருகின்றமை தவிர்க்க இயலாது.

**என் உலகம் மாறிவிட்டது**
**மாறிக் கொண்டேயிருக்கிறது**
**நான் என் பாட்டியுடன் சென்ற**
**அந்தக் கோவில் எங்கே**
**நான் சாதனை முறிவுகள் செய்த**
**பள்ளி எங்கே?**
**காலமே நீ என்னை மாற்றிச் செய்துவிட்டாய்**

இந்நூலுக்கு அணி செய்துள்ள பேரா. கா. செல்லப்பன் அவர்களுக்கு என் நன்றி.

இந்நூலாக்கத்திற்குத் துணை நிற்கும் நல்ல உள்ளங்களை நன்றியுடன் இங்கு நினைவுகூர்கிறோம்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் **மாண்புமிகு தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை அரசுச் செயலாளர் திரு. இர. சிவகுமார் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# முன்னுரை

முனைவர்: **கா.செல்லப்பன்**
மேனாள் இயக்குநர்
தமிழ்நாடு மாநில ஆங்கில பயிற்றகம்
சென்னை.

வெள்ளையர்களின் காலனி ஆதிக்கத்தின் குறியீடாக இருந்த ஆங்கிலமே இப்போது காமன்வெல்த் இணைப்புச் சங்கிலியாக புதிய சகோதரத்துவத்தின் குறியீடாகிவிட்டது. இந்த நாடுகளில் எழுதப்படும் ஆங்கில இலக்கியத்தை பேரரசு மையத்தை மறுதலித்து எழுதும் இலக்கியம் என்பார் சல்மான் ருஷ்டி. ஒரு அடிமைப்படுத்தும் ஊடகம், ஒரு ஆற்றல்மிகு ஆயுதமாகிவிட்டது, என்பார் வோலே சோயின்கா, ஆங்கிலம் இந்த நாடுகளின் வாழ்வு நெறிக்கேற்ப வளைந்து கொடுத்து அதே நேரத்தில் அவற்றின் பண்பாட்டையும் வரலாற்றையும் உள்வாங்கி அவற்றின் நிகழ்கால எண்ணங்களையும், கனவு களையும் சிக்கல்களையும் வெளிப்படுத்தும் ஒரு செழுமையான ஊடகமாக உருவாகிவிட்டது. இந்த நாடுகளில் எழுதப்பட்ட கவிதைகளில் முக்கியமான வற்றைத் தொகுத்து ஒரு நூலாகப் பேராசிரியர் C.D. நரசிம்மையா வெளியிட்டார் அவற்றுள் முக்கியமானவற்றைத் தமிழாக்கித் தந்துள்ளார் பேராசிரியர் முனைவர் இசையமுது.

இந்தத் தொகுப்பில் இந்தியா, ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா, கனடா, சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, நியூசிலாந்து, பாகிஸ்தான் நாடுகளின் கவிஞர்களின் கவிதைகள் அழகாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தோரோதத் முதல் கோபால் சொன்ன வரை பதிமூன்று இந்தியக் கவிஞர்களின் கவிதைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இக்கவிதைகள் மிகக் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அழகாகத் தமிழாகத் தரப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக அரவிந்தரின் *"The Stone Goddess"* கல் இறைவியாகத் தமிழில் செதுக்கப்பட்டிருக்கிறாள்.

Now veiled with mind she dwells and speaks no word,
Voiceless, intractable, omniscient,
Hiding until our soul has seen, has heard
The secret of her strange embodiment

என்ற அரவிந்தர் வரிகள்.

மனமெனும் மறைதுகில் மூடிக்கொண்டு வாழும் அவள்
வார்த்தையெதும் உரைப்பதில்லை.

குரலிலி, புரிதற்கப்பாற்பட்டோள், அனைத்துமறித்தாள்
நம் ஆன்மா
தன்னைக் காணும் வரை,
தன் விநோத அகப்பண்புருவைச்
செவியுறும் வரை
ஒளித்திருப்பாள்

என்று தமிழ் வடிவம் பெற்றுள்ளன. குறிப்பாக "The secret of her strange embodiment" என்ற தொடர் "விநோத அகப்பண்புரு" எனச் செறிவோடு தரப்பட்டுள்ளது. ஏ.கே. இராமானுஜனின் அல்லாமா பிரபுவும் மூலத்தின் அடிப்படையுணர்வை அகழ்ந்து தமிழாக்கித் தரப்பட்டுள்ளது.

அதே போல் கமலா தாஸின் பெண்ணியக் கவிதைகளும், கவிதை பற்றிய கவிதைகளும் கருத்தோட்டத்துக்கு ஏற்ற நடையில் தமிழாக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, *'Someone else's song'* என்ற பாட்டின் கடைசிப் பகுதி.

நான் / ஒரு கோடி கோடி மௌனங்கள்
வேறொருவரின் பாடலில் கோர்க்கப்பெற்ற
படிகக்கல் மணிகள் போல

என்று மூலத்தின் உணர்வோடு தமிழில் தரப்பட்டுள்ளது.

அடுத்து ஷா நெய்ல்சன் போன்ற ஆஸ்திரேலியக் கவிஞர்களின் பாடல்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. "ஒரு நீலமலருக்கு" என்ற கவிதையும் "கடவுள் நிச்சயம் ஒரு காதலனாக இருந்திருப்பார்" என்ற கவிதையும் தமிழ்க் கவிதைகள் போல் உள்ளன. "செர்ரி" என்ற பூவின் பெயரைத் தமிழில் மாற்றம் செய்வது இயலாததால் அப்படியே தமிழில் தந்துள்ளார். A story from a woman's hair" என்பதற்கு "பெண் கூந்தலின் எழிலை" என்பது சற்று வித்தியாசமாக உள்ளது. ஏ.டி. ஹோப்பின் "The death of a bird" சிறப்பாக மொழியாக்கம் செய்யப்பட்டுள்ளது குறிப்பாக

"And the great earth, with neither grief nor malice,
Receives the tiny burden of her death"

என்ற இறுதி வரிகள்

"பரந்தகன்ற உலகு
அவளது இறப்பின் சிறுசுமையை
சோகமோ அல்லது வன்மமோ இன்றி
ஏற்றுக் கொள்கிறது"

என மூலத்தின் முரண் தொடையையும் உணர்வையும் நன்றாகத் தமிழில் தரப்பட்டுள்ளன. ஜூடித் ரைட்டின் "கடிகாரமும் இதயமும்" என்ற கவிதையின் கடைசி வரிகள், மனித காலத்திலிருந்து விடுபட்ட கவிதையின்

கொந்தங்களை சாதாரண அன்பால் காண்பதை அழகான காட்சியாகத் தரப்பட்டுள்ளது. பெர்னாட் டாடி போன்ற ஆப்பிரிக்க கவிஞர்களின் கவிதைகளின் மொழியாக்கமும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. அவைகளில் ஆப்பிரிக்கர்களின் அடிமன ஆசைகளும் கோபங்களும் இடம் பெற்றுள்ளன. இரு சகோதரிகள் ஒரு புதிய தொன்மமாக உருவெடுத்துள்ளது. டாடியின் "இறைவா உனக்கு நன்றி" யில்

"வெண்மை, குறிப்பிட்ட நிகழ்வுகளுக்கான வண்ணம்
கறுப்பு ஒவ்வொரு தினத்திற்குமான நிறம்
நான் உலகைக்
காலம் விடிந்த போதிலிருந்து சுமக்கிறேன்"

என்பதில் ஒரு பிரபஞ்ச சோகம் தெரிகிறது. ஒகொராவின் "முன்னொரு காலத்தில்" உரையாடல் தன்மையோடு படைக்கப்பட்டுள்ளது. டேவிட் டியோப்பின் "ஆப்பரிக்கா"விலே ஒரு பிரம்மாண்ட கோபம் கொந்தளிக்கிறது.

கனேடியக் கவிஞரான டோரதி லீ கவிதையின் தத்துவ படிமச் சங்கமம் மொழி பெயர்ப்பிலும் நன்கு வந்துள்ளது. "Narcissm" என்ற சொல்லுக்கு "சுயவந்தனை" நல்ல மொழி பெயர்ப்பு,

சிங்கப்பூர் கவிஞர் ஷர்லி லின்னின ;"words for father" ஒரு பின் காலனிய வாழ்க்கையின்,

"ஞானமற்ற உறவுகளால் நட்டநடுவில்
உடைக்கப்பட்ட பழமையின் படப்பிடிப்பு, மொழிபெயர்ப்பினும் தான்.

நியூஸிலாந்துக் கவிஞர் காதரின் மான்ஸ்ஃபீல்டின் கவிதையின் சோகத்தைத் தமிழில் பெரிதும் முயன்று தந்துள்ளார் இசையமுது. பாகிஸ்தான் கவிஞர்கள் பலரும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளனர். அகமத் அலி இந்தியாவில் பிறந்தவர். அவரது "லீ சேனுடன் உரையாடலின்" தத்துவச்சாரம் தமிழில் இயல்பாக உள்ளது.

"நன்மை தீமை இரண்டின் தொடக்கம் ஒன்று தான்
நீ தேடுகிறாய், ஆயின் கிடைக்கப்பெறுவதில்லை"
எனவே
நிறைவும் அமைதியும் விழைந்தால்
ஆசையினின்று அகல்கிறாய்.
எப்போதும் பசுமையுடன்
அறிதலின் அமைதியுடன்
இருத்தலின் ஒற்றுமையை
மூங்கிலிலும் பைனிலும் பார்"

என்பது கணியன் பூங்குன்றனின் பாடலிலும் புத்த சிந்தனை இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது முடிவில்

"ஒன்றுமற்றதற்கு ஒன்றைச் சுமக்கும் வேலை கொண்ட
பயணக் கூடுகளைக் கலைத்துவிடு
முடிவில் தொடக்கத்தை அணைத்துக் கொள்ளத் தயாராயிரு"

என்ற வரிகள் டி.எஸ்.எலியட்டின ; *"In my end is my beginning"* என்ற வரியின் தாக்கம் தெரிகிறது.

தொடக்கத்தில் காமன்வெல்த் நாடுகளின் ஆங்கிலக் கவிதைகளில், பழைய பண்பாடுகள் புதிய மொழியில் தங்களை அடையாளம் காட்டிக் கொள்கின்றன. மேலும் காலனிய, பின் காலனியத் துயரங்களும், கவிதைகளுக்கு ஒரு அகன்ற பரிணாமத்தைத் தருகின்றன. இவற்றில் ஆங்கிலம், தான் அடிமைப்படுத்திய நாடுகளின் மனிதத்துக்கு அடிமையாவதைக் காண்கிறோம்.

மொழி பெயர்ப்பில் சிந்துவதுதான் கவிதை என்பார் ராபர்ட் ஃப்ராஸ்ட் என்ற அமெரிக்க கவிஞர். ஆனால் இசையமுதுவின் மொழி பெயர்ப்பில் ஒரு மூல மொழியின் உயிர்ப்பாற்றல் உள்ளது. அவருடைய தமிழ்ப்புலமையும் படைப்பாற்றலும் சின்னச் சின்ன வாக்கியங்களில் நல்ல கவிதைகளைத் தமிழுக்குப் படைத்தளிக்க உதவியுள்ளன. நல்ல மொழி பெயர்ப்புகள் மூலத்தின் பிரதிபலிப்பாக மட்டுமல்லாமல் புத்தாக்கம் செய்கின்றன. அவற்றில் இருமொழிகளும் அடித்தள நிலையில் சங்கமித்து மூன்றாவது மொழி உருவாகின்றது. அப்போது இறுகி இணையும் *(condensation and synthesis)* பாங்கு தெரியும். அப்போது கவிதை மொழி பெயர்ப்பிலும் பளிச்சிடும்.

பிளேட்டோ, உலகம் உண்மையின் நிழல், கவிதை நிழலின் நிழல் என்பார். "Imitation of imitation" என்பார்கள். ஆனால் அரிஸ்டாட்டில் "போலச் செய்வதன் மூலம் தான் நாம் உண்மையாக உண்மையை உணர்கிறோம்" என்கிறார். மொழியாக்கமும் அப்படியே, சிலர் கருத்துப்படி மூல இலக்கியங்களே மொழியாக்கங்கள் தான். வாழ்க்கையே மொழி பெயர்ப்பு தான். நினைவு, நிகழ்வின் மொழி பெயர்ப்பு ; கனவு, நினைவின் மொழி பெயர்ப்பு, கவிதை, கனவின் மொழி பெயர்ப்பு. இந்தத் தொகுப்பு அந்த மொழி பெயர்ப்பின் மொழிபெயர்ப்பு. ஆனால் நிழல்கள் தான், இலக்கியங்களில் நிஜங்களைக் காட்டுகின்றன. ஆழ்ந்து பார்த்தால், நிழல் நிஜமாவதையும், நிஜம் நிழலாவதையும் அரியலாம்.

இந்த முயற்சி தமிழ்க் கவிதைக்குப் புதுவரவு. தமிழுலகு இதனை வரவேற்கும் என்பதில் ஐயமில்லை

சென்னை
11.04.2010

கா. செல்லப்பன்

# என்னுரை

இங்கு மொழிபெயர்க்கப்பட்டுள்ள பன்னாட்டுக் கவிதைகளும் எனக்கு இன்பம் தந்தவை. முதன் முறை வாசித்த உடனேயே அவற்றை என் தாய்மொழியாம் செழுந்தமிழில் அறிய, அனுபவிக்க, உணரக், காண வேண்டும் என்ற உந்துதல் ஏற்பட்டது. என் அனுபவத்தை வைத்து நோக்கும் போது மொழிபெயர்ப்புப் பணி என்பது தானே வர வேண்டிய ஒரு இயல்பான மன நடவடிக்கை என்பது மேலும் வலுப் பெறுகிறது. அதாவது அது ஒரு ஆக்கல் கலை. வால்ட் விட்மனின் புல்லின் இதழ்கள் போல. இத்தகு ஒரு உணர்வு உந்துதலே இராபர்ட் ஷட்டக் என்பார் கூறும் சிந்தனை நிலை எனக் கொள்ளலாம்.

"The translator is thinking in a limbo region belonging to neither language"

என்பார் ஷட்டக். ஒவ்வொரு கவிதையும் தமிழில் எழுதி முடிக்கப் பெற்றவுடன் அதை முழுமையாக அனுபவித்த நிறைவு ஏற்பட்டது.

பல்வேறு நாடுகள், பலவகைப் பண்பாடுகள் கொண்ட பல்வேறு இன மனிதர்களின் வாழ்வு அந்தந்த நாட்டுக் கவிகளால் இவற்றில் தரப் பட்டுள்ளது. பல வண்ண முத்துக்களைக் கோக்கப் பயன்படும் ஒரே நூல்போல அவையனைத்தினுள்ளும் இன மத எல்லைகளைக் கடந்த மனித உணர்வுகள், வேதனைகள், போராட்டங்கள், ஏக்கங்கள் என்ற ஒற்றுமை காணக் கிடக்கின்றது.

என்நாடு, என்மக்கள், என் செல்வம் என்று மனிதன் வேற்றுமை பாராட் டினாலும் இன்ப துன்ப நுகர்வுகள் எல்லோருக்கும் ஒன்றே என்பதற்குச் சாட்சியாக நிற்கின்றன இந்நாட்டுக் கவிதைகள். ஒப்பிலக்கியம் என்பது ஒருலகக் கொள்கைக்கு அடித்தளமிடுவது. ஒப்பிலக்கியமும், மொழிபெயர்ப்பும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் எனக் கொள்ளலாம். அவ் வகையில் இம்மொழிபெயர்ப்பு அடிமைத் தளையினின்று மீண்டு காமன்வெல்த் என்னும் ஒரே குடையின்கீழ் நிற்கும் இந்நாட்டு மக்களின் உணர்வுக் கொப்பளிப்புகளைத் தமிழ் கூறும் உலகு உணர ஒரு வாயிலாக வழங்கப்படுகிறது.

ஒரு மொழியாக்கம் முழுமையானதாக அமைய அதில் மூலப் படைப்பின் "த்வனி", உள் உருவம் மற்றும் ஆழ்பொருள் ஆகியன இடம் பெற வேண்டும்

என்பார் பேராசிரியர் க செல்லப்பன். அவ்வடிப்படையில் இம்மொழிபெயர்ப்பு ஒரு வெற்றிகரமான முயற்சி என்று கருதுகிறேன்.

*பிறநாட்டு சாத்திரங்கள்*

***தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்*** *என்றான் பாரதி.*

எந்தமொழி என் நாட்டை ஆண்டதோ, எந்த மொழியை என்நாடும் இதர அடிமைப்பட்ட நாடுகளும் தமதாக்கிக் கொண்டனவோ அந்த மொழிக் கவிதைகளை என் மொழியில் இங்கு தருவது எனக்கு மகிழ்ச்சி.

ஆங்கிலேயக் கவிஞர்களின் கவிதைகளை வாசித்துவிட்டு முதன் முதலாக காமன்வெல்த் ஆங்கிலக் கவிதைகளை வாசிப்போரால் அவை வித்தியாசமான ஆங்கிலக் கவிதைகளாக உணரப்படும். அதுவே அவற்றின் வெற்றி. அக்காமன்வெல்த் கவிஞர்கள் தமதைத் தம்மதாகத் தந்துள்ளனர் தம்மை அடக்கிய மொழியில்.

கவிதை இனியது; கவிதை செழுமியது; கவிதை கவினுடையது; கவிதை கற்போரைக் கவர்வது; கவிதை எளியது; கவிதை சுருக்கிப் பெருக்குவது; கவிதை கவிஞனுக்கு ஓர் ஆக்கம்; கவிதை ரசிகனுக்குப் புது அனுபவம்; கவிதை விரைந்து விருந்தாவது; கவிதை யாவர்க்கும் விருப்பமான வடிவு.

கவிதை எனக்கும் கைவந்தது. நான் அகரம் எழுதிய அன்று தந்தை அகமகிழ்ந்து பா புனைந்தார். அன்னை தமிழும் ஆங்கிலமும் ஊட்டி வளர்த் தாள். ஆங்கிலமும் அருந்தமிழும் நட்பாயின. கவிதை எனக்கும் கைவந்தது.

இந்த மொழியாக்கம் வாழ்வெனும் சுழலின் நடுவே நான் பெற்ற தடையற்ற இன்ப ஓடம். பெற்ற இன்பம் வையம் பெறத் தந்தேன் என் தமிழ் அறிந்த உலகிற்கு.

இந்த இனிய அனுபவத்திற்கு இலக்கிய முகவரி வழங்கியது என் ஆசான் பேராசிரியர் க. செல்லப்பன் அவர்களின் முன்னுரை.

எண்ணங்களைச் செயலாக்க எழுச்சி தந்தது என் இனிய மகளின் பக்கத் துணையிருப்பு.

**இரா. பேபி வேகா இசையமுது**

# காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் தமிழாக்கம்
## சிக்கல்களும் தீர்வுகளும்

மொழிபெயர்ப்பு என்பது ஆக்கல் இலக்கை நோக்கி அழைத்துச் செல்லும் ஓர் கவின்கலைப் பாதை. ஒரு படைப்பை மற்றொரு மொழியில் மீள்படைப்பு செய்தல் மொழிபெயர்ப்பு. அதன் வெற்றியின் அளவு அம்மொழிபெயர்ப்பின் ஆழ் பொருள் மற்றும் செயல் வகை ஆகியன குறித்த மொழிபெயர்ப்பாளரின் புரிந்துணர்வு, அனுபவம், ஆழ்நோக்கு மற்றும் இருத்தலை அப்படியே படைத்தல் ஆகிய திறமைகளைப் பொறுத்து அமைகிறது. ஒரு மொழிபெயர்ப்பானது மூலப்படைப்பின் கருத்துக்கு வழிப் படைப்பு பொருளாக அமையும் பொழுது வெற்றிகரமானதாக அறிவிக்கப்படுகிறது அவ்இலக்கை அடைவதற்கு மூலப்படைப்பாளர் யாருக்காக எழுதினாரோ அம்மக்களை மொழிபெயர்ப்பாளர் புரிந்து கொள்ளவேண்டியது அவசியமானது.

மொழிபெயர்ப்பாளர் ஓர் அடிமை. ஏனெனில் மூலப்படைப்பிற்கு அவர் முழுமையாக உண்மையானவராக இருத்தல் வேண்டும். அவர் ஒரு தனிக்காட்டு மன்னனும் கூட, ஏனெனில் வழிமொழியைத் தன் தேவைகளுக்குப் பயன்கொள்ளும் முழு உரிமையும் அவருக்கு உண்டு. மூலத்தின் ஆழ்பொருளையும் அழகையும் வெளிக்கொணர வழிமொழியின் சிக்கல்களை வெற்றிகொள்ளும் திறனும் அதன் நய நுட்பங்களை வழிப்படுத்தும் கைத்திறனும் ஒரு மொழிபெயர்ப்பாளரின் தனித்துவத்தை எடுத்தியம்புகின்றன.

மேற்கூறிய அடிமைத்தனத்தின் அளவுதான் என்ன? மொழிமாற்றம் செய்யும் முயற்சியில் பாதைமாறிடக்கூடாது. எடுத்துக்காட்டாக ஒரு நிலையையோ சூழலையோ படைக்கும்போது அவை எவ்வாறு உள்ளனவோ அவ்வாறே படைக்க வேண்டுமேயன்றி வழிமொழி மக்களின் பண்பாடு மற்றும் வாழ்வில் உள்ள அவற்றில் மாதிரிகளை மாற்றாக அனுமதிக்கக் கூடாது. மேலும் மூலத்தின் பொருளை நிறமாற்றியோ தன் குறிப்பேற்றியோ, படைத்திட லாகாது. இவை மொழிபெயர்ப்பாளன் எதிர்கொள்ளும் அதிமுக்கியச் சிக்கல்கள். ஏனெனில் எந்த ஒரு மொழியும் மற்றதிலிருந்து வேறுபட்டது. வழிமொழியை மூலப்படைப்பை அதிகரித்திடாத அல்லது குறைத்திடாத ஊடகமாகப் பயன்படுத்த அவர் தகுதி பெறுகையில் சுதந்திரம் அவர் விருப்பச் செயல்முறையாகிறது. இவ்வகையில் படைப்பில் இலக்கியக்கோட்பாட்டமைதியும் உன்னிப்புடன் ஆளப்பெறவேண்டும். உதாரணமாக ஒரு குறிப்பிட்ட இலக்கிய வகையின் மொழிபெயர்ப்பு அதன் அல்லது வழிமொழியில் அதற்கு இணையான இலக்கிய வகையின் சட்டத்தினுள் பொதிந்து பொருந்த வேண்டும். இத்திறனில் குறையிருப்பின் மொழிபெயர்ப்புப் பணியில் குறை ஏற்பட அது ஏதுவாகும்.

சிதைக்கப்பெற்ற மொழியெர்ப்புகளைப் பற்றிப் பேசும்பொழுது முனைவர் S. தட்சிணாமூர்த்தி அவர்கள் பலர் ஒருங்கிணைந்து அப்பணியைச் செய்தல் நலம் பயக்கும் என்பார். அம்முறை பொருட்பிறட்சியைத் தடுப்பதோடல்லாமல் ஒரு மொழிபெயர்ப்பின் தனி அழகுருவையும் தடுத்துவிடும். ஏனெனில் ஒவ்வொரு மொழிபெயர்ப்பாளனும் ஒரு படைப்பாளனே. மற்றும் ஒவ்வொரு படைப்பாளனும் தன் புரிந்துணர்வின் அடிப்படையில் அழகுணர்வுடன் வார்த்தைகளை அமைக்கிறான். பலர்கூடி மொழி மாற்றம் செய்யும் பணியை அறிவியல் வார்த்தைகளுக்குமட்டுமே செயல்படுத்தப்படுதல் நன்று.

## மொழிபெயர்ப்பு செயற்பாங்கு

மொழிபெயர்ப்பின் குறிக்கோளானது வழிமொழிப் படைப்பை மூலப் படைப்புடன் சரியாசனத்தில் வைத்தலாகும். ஆழ்பொருள், உருவம், மொழியின் செருக்கு, சிந்தனையை எடுத்துரைத்தலில் எளிமை, நயம், பண்பாட்டு, சமுதாய வழக்கு வார்த்தைகளை மற்றும் கவிதைகளின் வரிகளின் எண்ணிக்கை கூட, வழக்கு வார்த்தைகளை ஆள்வதில் கவனம், ஆகியவற்றில் மூலத்துடன் ஒத்த நிலை இருந்தால் மட்டுமே இதில் நியாயம் வழங்கப்பெறும். ஒரு கவிதை எந்த அளவு கவித்துவத்துடன் இருத்தல் அவசியமோ, ஒரு உரைநடை எவ்வாறு உரையாக இருக்க வேண்டுமோ அதே போல் ஒரு மொழியமைப்பின் முழு அனுபவமானது மூலப்படைப்பாளனின் படைப்புத் திட்டத்தை சற்றேறக்குறைய முழுமையானதாக வழங்குவதாக இருத்தல் அவசியம். தொல்மொழியாம் தமிழுக்கு உரிய வியப்பார்வம் மற்றும் மரியாதை கலந்த மகிழ்ச்சியுடன் மொழிபெயர்ப்பாளர்கள்,

"மரபு நிலை திரியா மாட்சிய ஆகி" (தொல் 1593)

எனும் தொல்காப்பியரைத் தம் வழிகாட்டியாகக் கொள்ளுதல் சிறப்பு.

## மொழிபெயர்ப்பாளன் பயணிக்க வேண்டியபாதை

மொழிபெயர்ப்புப் பணி ஒரு கடுமையான பணித்தலைவன். அதிலும் இலக்கியமொழிபெயர்ப்பு அதிகமான அதே சமயம் மிகு இன்ப வெகுமதி தரும் பணியாகும். ஏனெனில் அறிவியற் பாற்பட்ட பெயர்ப்புகள் ஒன்றுக்கு ஒன்று என்ற விதத்தில் மட்டுமே புதுப்படைப்பிலும் அமைவதால் அப்பணி எளிதாகிறது. ஆயின் இலக்கியத்தைப் பொறுத்தவரை ஏற்கனவே உள்ள ஒரு படைப்பு வேற்று மொழியில் மொழி இயல்புகளுடன் புதியதோர் படைப்பாக உருவாகிறது. முறையாகச் செய்யப்பெரும்பொழுது இலக்கிய மொழிபெயர்ப்பு இரு படைப்பாளர்களால் இவ்வுலகுக்கு வழங்கப்பெறும் இருவேறு பண்பாடுகளின் ஒரு மகிழ் இணைவுப் பரிசு எனலாம்.

மொழிபெயர்ப்பைத் தனிமனிதன் தன் சொந்த இன்ப நுகர்வுக்காகச் செய்யினும் இப்புவி பயனுற இலக்கிய பணியாக அறிவியல்பணிச் செய்யினும் இவ்விருவகையாளருமே சில சிக்கல்களை எதிர்கொள்வது இயல்பாகும்.

ஒரு படைப்பென்பது ஒரு மொழியின் வெளிப்பாடு. அதனை வேற்று மொழியில் தரும்பொழுது எதை, எவ்வாறு, எப்படியல்லாது எனும் கேள்விகள் உருவாவது இயற்கையே. இக்கேள்விகளே ஒவ்வொரு மொழியின் தனித்துவத்தையும் பறை சாற்றி நிற்கின்றன. மொழிபெயர்ப்பாளனின் பணி இத்தனித்துவங்களினூடே பயணித்துச் சிக்கல்களில் சிக்காமல் லாவகமாகப் புதுப்படைப்பொன்றை வழிமொழியில் தருதலாகும்.

## மொழிபெயர்ப்பாளர்கள் எதிர்நோக்கும் சிக்கல்கள்

(1) மூலமொழியின் ஒரு இலக்கியவகை வழிமொழியில் இல்லாதிருக்கலாம். (எ.கா. டன்கா 5 வரிக் கவிதைகள்)

(2) வேற்றுமொழி வாழ்க்கை முறை நயம் கூறும் வார்த்தைகள் வழி மொழியில் இல்லாதிருக்கலாம்.

(3) ஒரு சொல்லுக்கு ஒரே சொல்லில் மொழிபெயர்ப்பு வழங்க இயலாதிருக்கலாம்.

(4) மேற்கண்ட 2,3 காரணங்களால் ஒரு கவிதை கவிதைத்துவம் இழந்து உரைநடையாக அமைக்கப்படும் ஆபத்து ஏற்படலாம்.

(5) ஒரு வழக்கு மொழிச் சொற்கள், பெயர்ச்சொற்கள், ஆகியன மொழிபெயர்ப்பில் கேள்விக்குறி எழுப்பலாம்.

(6) பொருள் விளங்கச் செய்யக் கவிதைகளில் வரியமைப்புகளை மாற்றியமைக்க வேண்டியது இருக்கலாம்.

(7) அடுக்குத் தொடர்கள், ஓசைகள், மோனையை எவ்வாறு எழுதுவது என்று சிந்திக்க வேண்டியது இருக்கலாம்.

(8) ஆங்கிலத்தில் சில வார்த்தைகளாகத் தலைப்புகளைப் பெரிய எழுத்தில் வழங்கிப் பொருள் சூட்டுதல் தமிழில் இல்லை:

## சில தீர்வுகள்

மொழிபெயர்ப்பென்பதே சிக்கல்களை எதிர்நோக்கி வெற்றிநடைபோட வேண்டிய ஒரு பணிதான். எனவே இடத்திற்கும் ஆழ் பொருளுக்கும் மொழி நயத்திற்கும் இடர் ஏற்படாதவாறு மொழிபெயர்பாளன் சிற்பி அடித்தும் தட்டியும், நீட்டியும் நெளிவு சுளிவு ஏற்றியும் நளினமான சிலையைக் கல்லில் செதுக்குவதுபோலத் தன் மொழித்திறனையும் இலக்கிய நுகர்வுப் பண்பையும் முழுவீச்சில் பயன்படுத்திப் புதிய படைப்பொன்றை உருவாக்கிடல் வேண்டும்.

மேற்கண்ட சிக்கல்களுக்குத் தீர்வாக

1. இலக்கியவகை வழிமொழியில் இல்லாத நேரங்களில் அதனை உருவாக்குவதே மாற்றாக அமையும் (உம்) ஜப்பானிய ஹைக்கூ; அமெரிக்க டன்காக்கள்.

2. எ.கா., Snowballing - பனிபடர்ந்து குளிர்நிறைந்த ஐரோப்பிய நாடுகளின் இக்கூற்றுக்குத் தமிழ்நாட்டு வெப்பச் சூழ்நிலையில் நேரீடான தமிழ் வார்த்தைகள் இல்லை எனவே “சிக்கல் பெரிதானது” என்றே எழுத இயலும்.

3. ஒரே சொல்லில் பெயர்க்க இயலாத பொழுது மொழி பெயர்ப்பாளர் தன் திறன் கொண்டு புதிய சொற்களை உருவாக்கலாம். உம்: Being - இருத்தல்.

4. கவிதை கவிதையாகத்தான் மொழிபெயர்ப்பில் படைக்கப்பெற வேண்டும். எனவே உரைநடையாதலைத் தவிர்க்கும் பொருட்டு புதிய வார்த்தைகள் உருவாக்கப்படலாம். எ.கா. Sidekicks - உடனோடி

5. ஒரு மதத்தின்பாற்பட்ட சொற்கள் வேற்றுமொழியில் முழுமையான சமயப்பெயரைத் தருகின்றனவா எனும் கேள்வி ஒருபுறமும் அவற்றிற்கு நேர் சொல் தமிழில் இல்லாத பொழுது என்ன மாற்று என்பதுமாக இரு கேள்விகளைக் கீழ்க்கண்ட சொற்கள் உருவாக்கின்றன.

Rannga; Goanna

இவ்வேளைகளில் ஒலிமாறாமல் அவற்றைத் தமிழ் எழுத்துக்களில் எழுதுவதுடன் பொருள் விளங்கச் செய்ய உரைகளும் வாய்ப்புள்ள இடங்களில் ஒன்றோ இரண்டே சொற்களிலும் மொழிபெயர்ப்புத் தரலாம்.

Rannga - அதி புனிதப் பொருட்கள்: ரன்ங்கா

Goanna - ஆதி உயிர் : கோஅன்னா

Neon - நியான்; அச்சொற்களின் பெயர்விளக்கம் தரலாம். Perth - பெர்த் நகரின் பெயர்

6. ஆழ்பொருளைப் பொருள் மாறாமல் வழங்கும் பணியில் வரிகளின் வரிசைகள் மாற்றியமைக்கப்படுதல் தவிர்க்க இயலாததாயினும் அவ்வாறு செய்கையில் கவிதையின் தன்மை கெடாது மொழிபெயர்த்தல் இன்றியமையாதது.

7. ஒத்த பண்பாட்டினைப் பகிரும் கவிஞர்களின் எழுத்துக்களுக்கு வழிமொழியில் மொழிநயம் காணப்பெறும் பொழுது மொழி பெயர்ப்பு எளிதாகிறது.

(எ.கா) I am a million, million people” - நான் ஒரு கோடி கோடி மக்கள்

ஒவ்வொரு மொழிபெயர்ப்பும் ஒரு புதிய அனுபவம். ஆதலின் அவ்வப்போது எழும் சிக்கல்களை விளையாட்டு வீரன் ஆடுகளத்தில் பந்தை எதிர்கொள்ளும் ஒவ்வொரு முறையும் புதிதாய்ச் செயல்படுதல் போல எழும் சிக்கல்களை புதிது புதிதாகத் தீர்த்க்கொள்ள தயாராக இருத்தல் அவசியம்.

ஆங்கிலத்தில் இருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட ஒரு கவிதை ஈண்டு தரப்படுகின்றது:—

## Because I could Not Stop for Death

*Because I could not stop for Death-*
*He kindly stopped for me-*
*The carriage held but just Ourselves-*
*And Immortality*

*We slowly drove - He knew no haste*
*And I had put away*
*My labour amd my leisure too,*
*For his Civility-*

*We passed the school, where children strove*
*At recess-in the Ring-*
*We passed the Fields of Gazing Grain-*
*We passed the Setting Sun-*

*Or rather-He passed Us-*
*The dews drew quivering and chill-*
*For only Gossamer, my gown-*
*My tippet-only Tulle-*
*We paused before a House that seemed*
*A swelling of the Ground-*
*The Roof was scarcely visible-*
*The cornice-in the Ground-*

*Sionce then-it's centuries-and yet*
*Feels shorter than the Day*
*I first surnised the Horses heads*
*were toward Eternity-*

## இறப்புக்கு நான் காத்து நிற்க இயலாததால்

*இறப்புக்கு நான் காத்து நிற்க இயலாததால்*
*அவன் கனிவுடன் காத்திருந்தான் எனக்காக*
*இறப்பின்மையையும் எங்களையும் மட்டும்*
*சுமந்திருந்தது புரவுவண்டி.*

*நாங்கள் மெதுவே பயணித்தோம் – அவசரமேதுமில்லை அவனுக்கு*
*அவன் நயத்தகு நாகரிகம் கண்டு நானும்*
*ஒதுக்கிவிட்டேன்*
*என் தொழிலும் ஓய்வும்.*

*குழந்தைகள் நாடி முயலும் பள்ளியைக் கடந்தோம் யாம்*
*சிற்றிடைவேளையில் – வட்டரங்கிலுமாக*
*நிமிர்ந்து கண்ணுறும் கதிர்கொள் நிலங்கடந்தோம்*
*கீழ்வீழ் கதிரவனைத் தாண்டிச் சென்றோம்.*

*அல்லது, சொல்லப் போனால் – அவன் எம்மைத் தாண்டினான்*
*பனித்துளிகள் நடுக்கத்துடிப்பும் குளிரும் கொணர்ந்தன.*
*என் உடுப்போ சிலம்பிநூல் மெல்லிது*
*என் தோளணி மென்பட்டு– லலைத்துகிலே*

*மண்ணின் வீக்கமாய்த் தெரிந்ததோர்*
*வீட்டின்முன் சிறிது நின்றோம்*
*கண்ணுக்குத் தட்டுப்படாக் கூரை*
*கூரைக்கீழ் அச்சுச் சிற்பங்கள் பூமியின் உட்கூட்டன.*

*குதிரைகளின் தலைகள் ஈறில்காலம் செல்வதை*
*முதன்முதலில் நான் உய்த்துணர்ந்த அன்றுமுதல்*
*ஆயிற்று பன்னூற்றாண்டுகள் – எனினும்*
*ஒரு நாளின் பொழுதைவிடச் சிறிதாய்த் தெரிகிறது. – எமிலி டிக்கின்சன்.*

வரிக்குவரி சரியாக மொழிமாற்றம் பெறும் இக்கவிதையில் Setting Sun – கீழ்வீழ் கதிரவன் எனும் வார்த்தை உபயோகம் கவிதைகளின் ஆழ்பொருளை நாளின் (வாழ்வின்) முடிவுக்கு அடையாளமாய் அமைகின்றது. "சொல்லப் போனால்" எனும் அன்றாட வழக்குச் சொற்கள் அவ்வரி விளக்கும் உணர்வை வெளிக்கொனரப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மூன்றாம் அடிவரையறையின் மோனை முதல் இரண்டு இடங்களிலும் கொண்டு செலுத்தப்பட்டும் மூன்றாவது இடம் நான்காவதுடன் இணைசேர்க்கப்பட்டும் பொருள்விளக்க உதவுகிறது.

'சென்றோம்' 'நின்றோம்' ஆகியன 'passed' மற்றும் 'paused' ஆகியவற்றின் பொருள் வேறுபாட்டைத் தமிழின் செழிப்புடன் வழங்குகின்றன.

இவ்வாறாக ஒவ்வொரு மொழியின் நயமும் சிறப்பும் கவிதை மொழி மாற்றம் ஆற்று நீர் சலசலத்து ஓடுதல் போலத் தங்குதடையின்றித் திகழ உறுதுணை புரிகின்றன.

## ஒரு மொழியாக்கம் பெற்றி பெறுவது எப்போது?

1. மொழிபெயர்ப்பாளர் மூலப்படைப்பை வழிமொழியில் அனுபவிக்க அவாவுறும்போது.

2. மூலப்படைப்பின் இலக்கியவகை அனுபவம் மொழிபெயர்க்கப்பட்ட இலக்கியவகையில் கிடைக்கும் பொழுது.

3. ஆழ்பொருள், அழகுணர்வு ஆகியன அடையப் பெறும் காலத்து.

4. மூலப்படைப்பாளர் மொழிபெயர்ப்பாளர் ஆகியோரின் எண்ண வோட்டங்களின் பரிமாற்றங்கள் ஒன்றிசைந்து அமையும் போது.

5. ஒரு மொழி பெயர்ப்பானது கடிது முயன்றதாக இராமல் இயல்பானதாக அமையும்பொழுது.

6. ஒரு மூலப்படைப்பினை அது யாருக்காக எழுதப்பெற்றதோ அந்தப் பயனாளர் பெற்ற அனுபவத்தைப் மொழிபெயர்ப்பை வாசிப்போர் பெறச் செய்யும் போது.

7. தொனி, உருவம், வரிகளின் எண்ணிக்கை ஒன்றாக இருக்கும்போது.

ஒரு மொழிபெயர்ப்பு வெற்றி பெற்றதாகக் கொள்ளலாம்.

மூலப்படைப்பு வரிக்கு வரி வழங்கப்படத் தேவையில்லை ஆயின் அது உருவாக்கும் இலக்கிய விளைவு வழிமொழி இயல்புகளின் பயன்பாட்டுடன் வெளிக் கொணரப்பெறுதல் வேண்டும். அதன் வழியே உருவச் சமநிலையையும், பொருட்சமநிலையையும் விட செயல்பாட்டுச் சமநிலையின்மீது முழுக் கவனம் செலுத்தப்பெற வேண்டும்.

இம்மொழிபெயர்ப்புப் பணி ஒட்டுமொத்தப் பார்வையில் ஒரு இனிய அனுபவமாகவே அமைந்தது. குறிப்பாகக் கவித்துவத்தைக் கொண்டு செலுத்தும் முயற்சி பெருமளவில் இயல்பானதாகவே இருந்தது. குற்ப்பிட்ட நாடுகளின் இயற்கை அமைப்பு, விலங்கின வகைகள், தாவரங்கள், சுற்றுச்சூழல் மற்றும் சமயம் சார்ந்தசொற்களே மொழி மாற்றம் செய்யும்பொழுது கடினமாக அமைந்தன. அவற்றுக்கு மேற்கூறிய தீர்வுகளின் அடிப்படையில் விடைகள் காணப்பெற்றுள்ளன. அவற்றைக் கண்முன் அக்கவிதைகளை இயற்றிய காமன்வெல்த் பன்னாட்டுக் கவிஞர்களின் கவித்திறத்தை நுகர்தல் அக்கவிதைகளை நான் தேர்வு செய்ததற்கான காரணங்களை அறிந்துகொள்ள உதவும். கலை கலைக்காக மட்டுமின்றி இவர்களால் வாழ்க்கைக்காகவும் இங்கு பயன்படுத்தப்பெற்றுள்ளது. ஒடுக்கப்பெற்ற, அடிமைப்படுத்தப்பட்ட, உரிமைகளும் பாரம்பரிய பண்பாட்டுச் செல்வங்களும் அந்நியரால் சூறையாடப்பெற்றுத் தம் அடையாளம் இழந்து வாடி நின்ற மக்களின் துன்பத்திற்கு வடிகாலாய், அவர்தம் வாழ்வியல் பெருமைகளைப் பறைசாற்றும் எக்காளமாய், அந்நாடுகளின் இயற்கை வளங்களைப்படம்பிடித்துக் காட்டும் அழகோவியங்களாய் இக்கவிதைகள் திகழ்கின்றன. சுருங்கச்சொல்லின் இக்கவிஞர்கள் அனைவரும் சமுதாய அறிவியலாளர்களாகவும் கலைத்தாயின் தவச்செல்வங்களாகவும் திகழ்கின்றனர்.

தாமரைக்கு மகுடம்சூட்டிய தோருதத்தின் பாடல்கள் பூத்த மலர் போல் புதியன. குறிப்பிடத்தக்க இனிமையுடையன சரோஜினி நாயுடு எழுதியவை அரவிந்தர் ஒரு முனி, தீர்க்கதரிசி; ஒரு விடுதலைப்போராட்டத்தின் அடையாள சின்னம். ஒரு கவிக்குத் தேவையான அனைத்தின் மொத்த உரு.ஷிவ்.கே. குமார் "என் முதல் காதல் கவிதைதான்" என்றார். அவர் ஒரு மக்கள்

கலைஞர். ஏ.கே.இராமானுஜன் எழுத்துக்களில் ஒரு தேடல் உண்டு, தற்கால வாழ்வின் தெளிவின்மையைப் படம்பிடிக்கின்றன அருண் கொலாட்கர் கவிதைகள். “கடவுளைப்பற்றி, அவர் உள்ளாரா இல்லையா என்ற நிலைப்பாடுகள் எதுவும் நான் எடுக்கத் தேவையில்லை” என்றார் அவர். சமுதாய வழக்குகளுக்குள் அடைபடாத வீரக்கவி கமலாதாஸ், “எது சரி எது தவறு என்பது குறித்த அடுத்தவர்களின் கருத்துக்கு நான் அடிப்பணியத் தேவையில்லை” என்பார். கோபால ஹொன்னல்கெரே ஓர் உண்முக நோக்காளர்.

ஷாய்நெல்சன் இயற்கை இன்ப நுகர்வாளர், ஏ.டி.ஹோப் ஒரு ஆக்கல் கலை வல்லுநர். விலாடிமிர் நபகவ் ஒரு கதைசொல்வோன், ஆசிரியர் மற்றும் மயக்குவோன். மண்ணின் மைந்தர் மீதான அந்நியர் ஆதிக்கம் ஜீடித் ரைட் கவிதைகளில் மூச்சுத்திணறுகிறது. ஜேம்ஸ் மெக்காலேயின் கவிதைகள் தனிமனிதத் தேவைகள் முதல் அரசியல் பண்பாட்டு வரலாற்று நிகழ்வுகள் அனைத்தையும் பிரதிபலிக்கின்றன. மனித உறவுகளின் முக்கியத்துவம் வின்செண்ட் பக்ளியின் கவிதை வரிகளில் பளிச்சிடுகிறது. புருஸ் பீவரின் இதயம் பூப்போன்றது. ஹிரோஷிமாவின்மீது அணுகுண்டு வீசப்பட்ட அன்று அது புயலாய் வெடித்து, முதல் கவிதையாய்க் கனத்தது. ரண்டால்ப் ஸ்டோவின் மூச்சுக்காற்றில் அவர் தேசப்பற்று கலந்துள்ளது. மனதின் உள்ளக் கிடக்கையை ஆழ்ந்து துளாவுகின்றன பேர்னாாட் பி, டேடீ யின் கவிதைகள். ரேப்ரிவெலோவின் கவிதைகள் அவர்தம் தாய்நாட்டின் சிற்றூர்ப்புற இலக்கியம் மற்றும் புவியியலில் மூழ்கித்திளைக்கின்றன. ஒரு பழம்பண்பாடு புதிய மேலை நாகரிகத்துடன் இணையும்போது என்ன நிகிழும் என்பதற்கு கேப்ரியல் ஒகாராவின் கவிதைகள் சாட்சி. “இந்தபூமி மனிதகுலத்தின் ஆதிவரலாற்றின் காட்சியகமாகும்” என்றார் செகேயே காப்ரே - மெதின்” ”அவன் கறுப்பன் அதனால் பெருமை அடைகிறான்”என்பார் பிராகோ டியோப். ஜான் பெப்பர் க்ளார்க்கின் கவிதைகள் மேலைக்கலாச்சாரம் மற்றும் சுய பண்பாட்டின் சுகமான இணைப்பு. டேவிட் டியோப்பின் பேச்சுமொழி நடை காலனிய ஆதிக்கத்தினை வெறுப்புடன் உமிழ்ந்து விடுதலைபெற்ற ஆப்ரிக்காவை காணத்துடிக்கின்றது. மனிதவாழ்வின் கனத்தை இயற்கைப் பின்னணியில் அழகுற எடுத்து இயம்புகின்றார் சார்ல்ஸ் ஜி.டி.ராபர்ட்ஸ். இவர் கனடியக் கவிதையின் தந்தை எனப் போற்றப்படுகிறார். இராபர்ட் பின்ச் கவிதைகள் சமூக நிலையை எள்ளி நகையாடுகின்றன.

டாரதி லிவ்சேயின் கவிதைகள் வாழ்வின்புதிர்களான வாழ்க்கை, மரணம் எழுதல், கனவு, காதல், வெறுப்பு, இருத்தல்-செய்தல் ஆகியவற்றைப் பற்றியன.

கரீபிய இலக்கிய மேடையில் எழுந்த முக்கியமான குரல் எடவ்ர்ட் பிராத்வெய்ட் உடையது. டெரக் வால்காட்டின் கவிதைகள் ஒரு வரலாற்றுக் கூர்நோக்கு ஒளிர்கிறது.

இன மற்றும் பெண்ணிய விவாதங்கள் ஷர்லி லிம் கவிதைகளில்

இடம்பெறுகின்றன. ஈ.ஈ.டியாய் ஹாங் கவிதைகள் புலம் நீங்கிய தென்கிழக்கு ஆசிய மக்களுக்கான நீதி கதைகளாக திகழ்கின்றன. எட்வின் தம்பூவின் கவிதைகள். புராணம் மற்றும் வரலாற்று நிகழ்வுகளின் தாக்கம் கொண்டன தறகால வாழ்வின் நிதர்சனங்களை எடுத்தியம்புகின்றன கிர்பால் சிங் கவிதைகள். ஜீன் அரசநாயகம் கவிதைகள் மனிதமனத்தின் ஆழத்தை ஓவியத்திரனுடன் படைக்கின்றன.

"எனக்கு எதையெல்லாம் செய்யதிறனுள்ளதோ அது அனைத்துமாக விரும்புகின்றேன்" என்கிறார் கேத்தரின் மேன்ஸ்பீல்டு. ஏ.ஆர்.டிக்பேர்பர்ன் கவிதைகள் தெளிவுற எடுத்துரைக்கின்றன. ஆலன் கர்னவ் கவிதைகள் காலம்காட்டும் கண்ணாடி. ஜேம்ஸ் பாக்ஸ்டர் கவிதைகள் சமுதாய மற்றும் அரசியல் கொள்கைகளை பறைசாற்றுகின்றனர். காடர்ன் ச்சேலிஸ் கவிதைகள் மனித வாழ்வின் ஆழ்ஞானம் கொண்டவையாக திகழ்கின்றன.

கிஷ்வர் நஹீத் பாகிஸ்தானின் தலைசிறந்த பெண்ணியக்கவி. பைஸ் அகமது பைஸ் கம்மியூனிசம் மற்றும் கூ-பி கொள்கைகளின் ஆதரவாளர். ஹைமீயா ரியாஸ் ஒரு சமுதாய சீர்திருத்தவாதி.

அகமது அலி ஒரு தீர்க்க சிந்தனையாளர். ஆலம்கிர் ஷஷ்மி கவிதையை ஒரு கவின்கலையாக நுகர்கிறார், தவுத் கமால் ஒரு தன்னிறைவு பெற்ற கவி.

கவிதை மொழிபெயற்ப்பின் சிறப்பு முலக்கவிதையை அதன் `த்வனி மாறாது படைத்தல் என்று முன்னர் கண்டோம் நான் முன்பே உரைத்தபடி இக்கவிதைகளின் கவித்துவத்தைத் தமிழில் கொனர்வது இயல்பாக எளிதாக அமைவது சிசொற்களை எழுதும் விதங்களில் சிக்கல்கள் தோன்றின. எனவே பின்வரும் பொருள் விளக்கவுரைகள் இணைக்கப் பெற்றுள்ளன.

டு.

# ஆசிரியர் குறிப்பு



விருதுநகர் பேராசிரியை தமயந்தி இராசதுரை, முனைவர் பு. இராசதுரை ஆகியோரின் மகள் முனைவர் இரா.பேபி வேகா இசையமுது, 1959 ஏப்ரல் 24இல் பிறந்தவர். சென்னை மாநிலக் கல்லூரியில் ஆங்கில இணைப்பேராசிரியராகவும் தமிழ்நாடு பாரத சாரண சாரணிய சங்க மாநிலத் துணைத் தலைவராகவும் உள்ள இவர் 1984ஆம் ஆண்டு மதுரை டோக் பெருமாட்டி கல்லூரியில் தம் கல்லூரிக் கல்விப் பணியைத் தொடங்கினார்.

பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் செனட் உறுப்பினர், விரிவுரையாளர் தேர்வுக் குழுக்களில் துறை வல்லுநர், தமிழ்நாடு நுகர்வோர் குழுக்களின் கூட்டமைப்பில் நாகை மாவட்ட மகளிர் ஒருங்கிணைப்பாளர், தமிழ்நாடு காவல்துறை மகளிர் காக்கும் கரங்கள் உறுப்பினர் ஆகிய பொறுப்புகளைத் திறம்பட வகித்தவர். பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் திரிசாரணியத்தைப் பகுதி IV பாடத் திட்டத்தில் இணைக்கக் காரணமானவர்.

மயிலாடுதுறை கல்லூரியில் பதிமூன்று ஆண்டுகள் துறைத் தலைவராக இருந்த காலத்து சிற்றூர்புற மாணவியரின் ஆங்கிலப் புலமை மற்றும் இலக்கியக் கல்வி வளர்க்க இவர் உருவாக்கிச் செயல்படுத்திய Participative Learning எனும் பயிற்றுமுறை பல்கலைக்கழக ஆய்வுக்குழு மற்றும் தேசியத் தர நிர்ணயக் குழுவினரால் பாராட்டப் பெற்றுள்ளது.

ஃபோர்டு அறக்கட்டளையின்கீழ் பாலியல் கொடுமை, பள்ளியை இளஞ்சிறார் இடைநிறுத்தல், சுமைதூக்கிப் பொருள் விற்கும் பெண்டிர் நிலை ஆகியன குறித்து குறுந்திட்ட ஆய்வுகள், சாலையோர கூட்டங்கள் நடத்தியுள்ளார் மற்றும் வீதி நாடகங்கள் எழுதி இயக்கியுள்ளார். பல்கலைக்கழக நிதிநல்கைக் குழு உதவியுடன் The emerging figure of a New Woman in Mass Media and Literature in Tamil Nadu எனும் தலைப்பில் கல்லூரிப் பேராசிரியர் களுக்கு மாநிலக் கருத்தரங்கு நடத்தியுள்ளார்.

பாரத சாரண சாரணிய சங்கத்தில் மாநில விருதுகளும் உலக சாரண இயக்க விருதான WAGG & GS விருதும் பெற்றுள்ளார். தமிழ்நாடு காவல்துறையுடன் பெண்களுக்கான சட்டங்கள் குறித்த கருத்தரங்கம் நடத்தியும் சமுதாய சீர்திருத்தம் காண உழைத்தவர்.

# பொருளடக்கம்

## Sonnet-The Lotus

Love came to Flora asking for a flower
That would of flowers be undisputed queen,
The lily and the rose, long, long hade been
Rivals for the high honour. Bards of power
Had sung their claims."The rose can never tower
Like the pale lily with her Juno mien" —
"But is the lily lovelier?" Thus between
Flower-factions rang the strife in Psyche's bower.
"Give me a flower delicious as the rose
And stately as the lily in her pride" —
"But of what colour?"- "Rose-red," Love first chose,
Then prayed, — "No, lily-white, — or, both provide;"
And Flora gave the lotus, "rose-red" dyed,
And "lily-white," — the queenlist flower that blows.

*Toru Dutt*

# தாமரை

*மலரவளிடம் வந்தது காதல், மலரொன்று வேண்டுமென்று*
*வாதத்திற் கப்பாற்பட்ட மலர்களின் அரசியைக் கேட்டு,*
*லில்லியும் ரோஜாவும்*
*ஆதிமுதல் போரிட்டுள்ளன அப்பெருமைக்கு.*
*திறமிகு கவிகள்*
*அவற்றின் புகழ் பாடியுள்ளனர்*
*“ஜூனோவின் பாவனை கொண்ட வெளிர் லில்லியைவிட*
*ரோஜாவால் சிகரமேற இயலாது”*
*“ஆனால் லில்லி அதைவிட வனப்பு மிக்கதா?”*
*இவ்வாறாக சைக்கீயின் வேனிலகத்தில்*
*மலர்க்கட்சிகளிடையே வாதம் ஒலித்தது.*
*“ரோஜாவின் அருஞ்சுவையும்*
*லில்லியின் ஒய்யாரப் பெருமிதமுமான*
*மலரொன்று தா”*
*“சரி, என்ன நிறம் வேண்டும்?”*
*காதல் முதலில் கேட்டது,*
*“ரோஜாச் சிவப்பு”*
*பின் இறைஞ்சியது*
*“இல்லை, லில்லியின் வெண்மை – அல்லது இரண்டையும் தா”*
*மலரவள் தந்தாள் தாமரை*
*“ரோஜாச் சிவப்புச்” சாயத்துடன் “லில்லியின் வெண்மை”*
உலகில் மலர்ந்தாடும் ராணித்துவ மலரை.

– **தோரு தத்**

## The Stone Goddesss

In a town of gods, housed in a little shrine,
From sculptured limbs the Godhead looked atme,-
A living Presence deathless and divine,
A Form that harboured all infinity.

The great World-Mother and her mighty will
Inhabited the earth's abysmal sleep,
Voiceless, omnipotent, inscrutable,
Mute, in the desert and the sky and deep.

Now veiled with mind she dwells and speaks no word,
Voiceless, inscrutable, omniscient,
Hiding until our soul has seen, has heard
The secret of her strange embodiment,

One in the worshipper and the immobile shape,
A beauty and mystery flesh or stone can drape.

*- Sri Aurobindo*

# கல் இறைவி

கடவுளரின் நகரத்தில்
ஒரு சிறு கோயிலில் குடிகொண்ட இறைமை
செதுக்கிய உறுப்புகளிலிருந்து நோக்கிற்று என்னை.

இறப்பற்ற தெய்வம், வாழும் இருப்பு
வரம்பிலிதனத்தையும் தன்னகம் கொண்டவோர் உரு.
அரும்பெரும் உலகத் தாயும் அவளின் வலிவுறு ஆற்றலும்
பூமியின் அறியப்படாத ஆழத்துயிலைக் குடிகொண்டன.
குரலிலி, யாங்கனுமுறை, ஆய்ந்ததறிதற் கப்பாற்பட்டோள்
ஓசையின்மையில், பாலைவனத்தில், வானில், ஆழத்தில்.
மனமெனும் மறைதுகில் மூடிக்கொண்டு வாழும் அவள்
வார்த்தையெதும் உரைப்பதில்லை.
குரலிலி, புரிதற்கப்பாற்பட்டோள், அனைத்துமறிந்தாள்.
நம் ஆன்மா
தன்னைக் காணும்வரை,
தன் விநோத அகப்பண்புருவைச்
செவியுறும்வரை
ஒளிந்திருப்பாள்.
பக்தனிடமும் அசைவற்ற வடிவிலும் இருப்பவள்
தசையாலோ கல்லாலோ
ஆடையிடக்கூடிய அழகு,
புதிர்.

– ஸ்ரீ அரவிந்தர்

## Surreal Science

One dreamed and saw a glade write Hamlet, drink
 At the Mermaid, capture immortality;
A committee of hormones on the Aegean's brink
 Composed the Iliad and the Odyssey.

A thyroid, meditating almost nude
 Under the Bo-tree, saw the eternal Light
And, rising from its mighty solitude,
 Spoke of the Wheel and eightfold Path all right.

A brain by a disordered stomach driven
 Thundered through Europe, conquered, ruled and fell,
From St. Helena went, perhaps, to Heaven.
 Thus wagged on the surreal world, until

A scientist played with atoms and blew out
The universe before God had time to shout.

*Sri Aurobindo*

# அடிமனத் தொடர்பிணைவு அறிவியல்

கனாக் கண்டு ஒருவன்
கடல் கன்னியை நுகர்ந்தான்
ஒரு சுரப்பி ஹாம்லெட்டை எழுதக் கண்டது
இறவாமையை வெற்றி கொண்டான் ஒருவன்.
ஏஜியன் கடல் விளிம்பில் ஒரு சுரப்பிக் குழாம்
இலியடையும் ஒடிசியையும் உருவாக்கியது
ஒரு சுரப்பி
போதி மரத்தடியில்
ஏறக்குறைய நிர்வாணமாய்த்
தியானமிருந்து
நிலைப் பேற்றொளியைக் கண்டது.
அவ்வாற்றல்மிகு தனிமையிலிருந் தெழுந்து
சக்கரத்தையும்
எண் வழிப் பாதையையும்
சரியாக உரைத்தது.
ஒழுங்கற்றுச் செயலாற்றும் வயிற்றால்
உந்தப்பட்ட ஒரு சிந்தனை
ஐரோப்பா வெங்கும் இடியாய் முழங்கி,
வென்று,
ஆண்டு,
வீழ்ந்தது.
புனித ஹெலனாவிலிருந்து
(ஒரு வேளை) சொர்க்கம்
சென்றடைந்தது
இவ்வாறாக,
இறைவன் அதட்டுவதற்குக்கூட அவகாசமின்றி
ஒரு அறிவியலறிஞன்
அணுக்களுடன் விளையாடி
அண்டத்தை ஊதிவிட்ட காலம் வரை
அடிமனத் தொடர்பிணைவு அறிவியல் உலகம்
வாலாட்டிக் கொண்டிருந்தது.

ஸ்ரீ அரவிந்தர்

## Indian Weavers

Weavers, weaving at breack of day,
Why do you weave a garment so gay?...
Blue as the wing of a halcyon wild,
We weave the robes of a new-born child.

Weavers, weaving at fall of night,
Why do you weave a garment so bright.?.....
Like the plumps of a peacock, purple and green,
We weave the marriage-veils of a queen.

Weavers, weaving solemn and still,
What do you weave in the moonlight chill.?....
White as a feather and white as a cloud,
We weave a dead man's funeral shroud.

*Sarojini Naidu*

# இந்திய நெசவாளிகள்

நாளின் விடியலில் நெய்துகொண்டிருப்போரே,
வண்ணப் பகட்டாடை நெய்வதும் ஏனோ?
வனவாழ் சிச்சிலிச் சிறகின் நீலத்தில்
பிறந்த குழந்தையின் உடையை நெய்கிறோம்
இரவு விழுகின்ற வேளையில் நெய்வோரே
இத்தகு ஒளிர்ஆடை ஏன் நெய்கிறீர்கள்?
மயிலின் நீலப்பச்சை இறகுகள் போல்
ஓர் அரசியின் திருமண மறைதுகில் நெய்கிறோம்.
ஆர்ந்தமைவுடன் இரவின் அமைதியில் நெய்வோரே
சில்லிட்ட நிலவொளியில் என்ன நெய்கிறீர்கள்?
இறகின் வெண்மையில் வெண்முகில் நிறத்தில்
இறந்துவிட்ட மனிதனின் மூடுதுணி நெய்கிறோம்.

சரோஜினி நாயுடு

## Indian Women

In this triple – baked continent
women don't etch angry eyebrows
on mud walls

Patiently they sit
like empty pitchers
on the mount of the village well

Pleating hope in each braid
of their Mississippi-long hair
looking deep into the water's mirror

for the moisture in their eyes.
With zodiac doodling on the sands
they guard their tattooed things

Waiting for their men's return
till even the shadows
roll up their contours

and age gone
beyond the hills

*Shiv K.Kumar*

# இந்தியப் பெண்கள்

*மும்முறை சுட்ட இக்கண்டத்தில்*
*மங்கையர் சினங்கொள் புருவங்கள்*
*மண்சுவர்கள் மேல் உயர்த்துவதில்லை.*
*கிராமத்துக் கிணற்றுவாய்க்*
*காலிப் பானைகள் போல்*
*பொறுமையுடன் அவர்கள் அமர்ந்திருக்கின்றனர்.*
*தங்கள் மிசிசிப்பி நீளக் கூந்தலின்*
*கட்டு ஒவ்வொன்றிலும் நம்பிக்கையைப் பின்னலிட்டுத்*
*தண்ணீர்க் கண்ணாடியின் ஆழத்துள்*
*தம் கண்ணீரைத் தேடிக் கொண்டு.*
*ராசிநாதனின் நிழல் மணல்களில் ஆடத்*
*தம் பச்சை குத்திய தொடைகளைக் காத்துக்கொண்டு.*
*மாலை நிழல்களும்*
*தம் அடுக்குகள் சுருட்டி*
*மலைகளின் பின்னே*
*மறையும் வரைத்*
தம் ஆண்களின் வருகைக்குக் காத்துக் கொண்டு.

**ஷிவ் கே. குமார்**

## Allama Prabhu

Poets of the past
are the children of my concubines
Poets to come
are infants of my pity.
The poets of the sky
are babies in my cradle.

Vishnu and Brahma
are my kinsmen and sidekicks

You are the father-in-law
and I the son-in-law,

O Lord of Caves

*Trans. A.K. Ramanujan*

# அல்லாமா பிரபு

*கடந்த காலக் கவிஞர்கள்*
*என் வைப்பாட்டியின் பிள்ளைகள்*
*வருங்காலக் கவிஞர்கள்*
*என் பரிவுணர்வின் குழந்தைகள்*
*விண்ணின் கவிஞர்கள்*
*என் தொட்டிலில் மதலைகள்*

*விஷ்ணுவும் பிரம்மாவும்*
*என் உறவும் உடனோடியும்*
*நீ மாமனார்,*
*நான் மருமகன்,*
ஒ குகைகளின் கடவுளே.

**மொழி பெயர்ப்பு ஏ.கே. இராமானுஜன்**

## The Bus

The tarpaulin flaps are buttoned down
on the windows of the state transport bus
all the way up to Jejuri.

A cold wind keeps whipping
and slapping a corner of the tarpaulin
at your elbow

You look down the roaring road.
You search for signs of daybreak in
what little light spills out of the bus.

Your own divided face in a pair of glasses
on an old man's nose
is all the countryside you get to see.

You seem to move continually forward
towards a destination
just beyond the caste-mark between his eyebrows.

# பேருந்து

ஜெஜுரி வரை செல்லும்
அரசுப் போக்குவரத்துப் பேருந்துகளின் சன்னல்களில்
தார்ப்பாலின் தொங்கல்கள் பொத்தானிடப்படுகின்றன.

உனது முழங்கையில்
தார்ப்பாலின் மூலையை அறைந்துகொண்டு
குளிர்காற்று சுழற்றியடிக்கிறது.

உறுமுகின்ற சாலை நெடுக நீ பார்க்கிறாய்.
பேருந்திலிருந்து வெளிச்சிதறும் மிகச்சிறு ஒளியில்
விடியலின் அடையாளங்களை நீ தேடுகிறாய்.

கிழவன் ஒருவனின் மூக்கின் மேல்
ஒரு சோடிக் கண்ணாடிகளில்
பிரிந்த உன் முகமே
நீ பார்க்கக் கிடைத்த கிராமப்புறம்.

அவனது புருவங்களுக்கு நடுவிலுள்ள
சாதிச் சின்னத்தைச் சற்றே தாண்டி
ஒரு இலக்கினை நோக்கி
நீ தொடர்ந்து முன்னேறுவதாகத் தெரிகிறது.

Outside, the sun has risen quietly.
It aims through an eyelet in the tarpaulin
and shoots at the old man's glasses

A sawed-off sunbeam comes to a rest
gently against the driver's right temple
Then seems to change direction

At the end of the bumpy ride
with your own face on either side
when you get off the bus

you don't step inside the old man's head.

*Arun Kolatkar*

*வெளியே சூரியன் அமைதியாக உதித்துவிட்டது.*
*அது தார்ப்பாலின் கண்ணினூடே குறிவைத்துக்*
*கிழவனின் கண்ணாடிகளைச் சுடுகிறது.*

*இழைத்தெடுக்கப்பட்டதொரு சூரியக்கதிர்*
*பேருந்து ஓட்டியின் வலது சென்னியில்*
*மென்மையாக வந்து ஒய்கிறது.*
பின் திசை மாற்றுவதுபோல் தெரிகிறது.

*அந்தக் குலுக்கல் பயணத்தின் முடிவில்*
*உன் முகம் இப்புறமும் அப்புறமும் பார்க்கப்*
*பேருந்தை விட்டு நீ வெளியேறும்போது*
அந்தக் கிழவனின் மண்டைக்குள் இறங்கிவிடாதே.

**அருண் கொலாட்கர்**

## *An Old Women*

An old woman grabs
hold of your sleeve
and tags along.

She wants a fifty paise coin.
She says she will take you
to the horseshoe shrine.

You've seen it already.
She hobbles along anyway
and tightens her grip on your shirt.

She won't let you go.
You know how old women are.
They stick to you like burr.

You turn around and face her
with an air of finality
You want to end the farce.

When you hear her say,
'What else can an old women do
oh hills as wretched as these'?

# ஒரு மூதாட்டி

*ஒரு கிழவி*
*உன் சட்டைக் கையைப் பற்றிக்கொண்டு*
*பின்னோடு வருகிறாள்.*
*ஐம்பது பைசா நாணயம் ஒன்று கேட்கிறாள்.*
*உன்னைக் குதிரை லாடக் கோயிலுக்கு*
*அழைத்துச் செல்வேன் என்கிறாள்.*

*அதை நீ ஏற்கனவே பார்த்துவிட்டாய்*
*இருப்பினும் அவள் முட்டுக்கட்டையிடுகிறாள்*
*உன் சட்டையில் தன் பிடியை இறுக்குகிறாள்*

*உன்னைப் போக அனுமதியாள்.*
*மூதாட்டிகளைப் பற்றி நீ அறிவாய்*
*அவர்கள் ஒட்டுமுள் போல் நம்மைப் பற்றிக் கொள்வர்.*

*நீ திரும்பி அவளை நேர்நோக்குகிறாய்*
*முடிவானதொரு கண்டிப்புடன்.*
*இந்தக் கேலிக்கூத்தை முடிக்க விழைகிறாய்.*

*"இப்படி யாதுமற்ற மலைக்குன்றுகளில்*
*ஒரு கிழவி*
*வேறென்ன செய்ய இயலும்?"*
*என்று அவள் கூறுவதைக் கேட்டு*
*நீ நேராக வானத்தை நோக்குகிறாய்*

You look right at the sky.
Clear through the bullet holes
She has for her eyes.

And as you look on,
the cracks that begin around her eyes
spread beyond her skin.

And the hills crack.
And the temples crack.
And the sky falls

with a plateglass clatter
around the shatterproof crone

And you are reduced
to so much small change
in her hand.

*Arun Kolatkar*

கண்கள் எனும் பெயரில்
அவள் கொண்ட குண்டுத் துளைகளினூடே
தடையற்றுத் தெளிவாக.

நீ பார்த்துக் கொண்டிருக்கையில்
அவள் கண்களைச் சுற்றித் தொடங்கும்
வெடிப்புகள்
அவள் தோலையும் தாண்டிப் பரவுகின்றன.

குன்றுகள் பிளக்கின்றன
கோயில்கள் கீறல் விடுகின்றன
நொறுங்குதற் கப்பாற்பட்ட கிழவியைச் சுற்றிக்
கண்ணாடிப் பாளங்களின் கடகடப்புடன்
வானம் வீழ்கிறது

சிறு நாணயங்களாக நீ
சிறுக்கிறாய்
அவள் கையில்

**அருண் கொலாட்கர்**

## Chaitanya

'Sweet as grapes
are the stones of Jejuri',
said Chaitanya.

He popped a stone
in his mouth
and spat out gods.

*Arun Kolatkar*

# சைத்தன்யா

*ஜெஜுரியின் கற்கள்*
*திராட்சை போன்று இனிப்பானவை"*
*என்றான் சைத்தன்யா.*
*அவன்*
*தன் வாயினுள் ஒரு கல்லை வீசினான்*
*கடவுளைத் துப்பினான்.*

**அருண் கொலாட்கர்**

# Makarand

Take my shirt off
and go in there to do the puja?
No thanks.

Not Me.
But you go right ahead
if that's what you want to do.

Give me the matchbox
before you go,
will you?

I will be out in the courtyard
where no one will mind if
if I smoke.

*Arun Kolatkar*

# மகரந்தம்

*என் சட்டையைக் கழற்றிவிட்டு*
*உள்ளே செல்லவா, பூசை செய்ய?*
*இல்லை, நன்றி.*

*நான் மாட்டேன்.*
*ஆனால் நீ செல் நேர்முன்னே,*
*அதுதான் நீ செய்ய விழைவதென்றால்.*

*செல்லுமுன்*
*என்னிடம் தீப்பெட்டியைத் தந்து போ,*
*தருவாயா?*

*நான் வெளியே முற்றத்தில் இருக்கிறேன்,*
*நான் புகைத்தால்*
யாரும் பொருட்படுத்தாத இடத்தில்.

**அருண் கொலாட்கர்**

## My Grandmother's House

There is a house now far away where once
I received love.... That woman died,
The house withdrew into silence, snakes moved
Among books I was then too young
To read, and my blood turned cold like the moon.
How often I think of going
There, to peer through blind eyes of windows or
Just listen to the frozen air,
Or in wild despair, pick an armful of
Darkness to bring it here to lie
Behind my bedroom door like a brooding
Dog.... You cannot believe, darling,
Can you, that I lived in such a house and
Was proud, and loved... I who have lost
My way and beg now at stranger's doors to
Receive love, at lease in small change?

*Kamala Das*

# என் பாட்டி வீடு

ஒரு காலத்தில் எனக்கு அன்பு கிடைத்த வீடு ஒன்று தூரத்தில் உள்ளது.
அந்த அம்மாள் இறந்தாள்
வீடு அமைதிக்குள் ஒடுங்கிக் கொண்டது
அப்போது வாசிக்க
நான் மிகச் சிறியவளாக இருந்த
புத்தகங்களுக்கிடையே
பாம்புகள் குடிகொண்டன.
என் குருதி நிலவு போல் குளிர்ந்து போனது.

எவ்வளவு அடிக்கடி அங்கு செல்ல வேண்டுமென்று
நான் எண்ணுகிறேன்.
சன்னல்களின் குருட்டுக் கண்களினுள்ளே
உற்று நோக்க,
அல்லது
உறைந்த காற்றை வெறுமனே
காது கொடுத்துக் கேட்க
அல்லது
கட்டற்ற மனக்கசப்பில்
ஒரு கையளவு இருளை இங்கே அள்ளி வந்து
என் படுக்கையறைக் கதவுக்குப் பின்னே
ஏங்கும் ஒரு நாய் போலப் படுத்திருக்க....

உன்னால் நம்ப முடியாது அன்பே
முடிகிறதா?
இன்று
என் பாதையைத் தொலைத்து
அன்பைச்
சிறு நாணயங்களாக வேனும்
பெற
அந்நியர் வாயில்களில்
இறைஞ்சி நிற்கும் நான்
அப்படியொரு வீட்டில்
பெருமையுடன்,
பாசம் பெற்று வாழ்ந்தேன்
என்று.

– கமலா தாஸ்

# Words

All round me and words, and words and words,
They grow no me like leaves, they never
Seem to stop their slow growing
From within.... But I tell myself, words
Are a nuisance, beware of them, they
Can be so many things, a
Chasm where running feet must pause, to
Look, a sea with paralysing waves,
A blast of burning air or,
A knife most willing to cut your best
Friend's throat.... Words are a nuisance, but
They never seem to stop their coming
From a silence, somewhere deep within...

*Kamala Das*

# சொற்கள்

என்னைச் சுற்றிலும் சொற்கள் சொற்கள் சொற்கள்,
அவை என்மேல் இலைபோல் வளர்கின்றன.
உள்ளிருந்து மெதுவாக வளர்தலை
அவை நிறுத்துவது போல் தெரியவில்லை.
ஆனால் நான் எனக்குச் சொல்லிக் கொள்கிறேன்,
சொற்கள் ஒரு தொல்லை
அவற்றிடம் கவனமாக இரு
அவை பலவுமாக இருக்க இயலும்.
ஓடிக் கொண்டிருக்கும் பாதங்கள்
தம்மை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டிய குழி,
கண்ணுற வேண்டியவை,
செயலிழக்கச் செய்யும் அலைகளின் கடல்,
எரிகின்ற வன்காற்றின் வீச்சு,
அல்லது
உனது சிறந்த நண்பனின் குரல்வளையை அறுக்க
மிக்க விருப்புறும் கத்தி...
சொற்கள் ஒரு தொல்லை
ஆனால்
மரத்தில் இலைகள் வளர்தல் போல்
என்னில் அவை வளர்கின்றன
உள்ளே
ஏதோவொரு ஆழத்தின் அமைதியிலிருந்து
வருவதை
அவை நிறுத்துவது போல் தெரியவில்லை.

– கமலா தாஸ்

# Someone Else's Song

I am a million, million people
Taking all at once, with voice
Raised in clamour, like maids
At village- wells.

I am a million, million deaths
Pox-clustered, each a drying seed
Someday to be shed, to grow for
Someone else, a memory.

I am a million, million births
Flushed with triumphant blood, each a growing
Thing that thrusts its long-nailed hands
To scar the hollow air.

I am a million, million silences
Strung like crystal beads
Onto someone else's
Song.

*Kamala Das*

# வேறு ஒருவரின் பாட்டு

*நான்*
*உயர்ந்த ஆரவாரத்தில்*
*கிராமக் கிணற்றங்கரைப் பெண்கள் போல்*
*எல்லோரும் ஒன்றுபோல் பேசிக் கொண்டிருக்கும்*
*ஒரு கோடி, கோடி மக்கள்.*

*நான்*
*ஒரு கோடி கோடி இறப்புகள்,*
*அம்மை கோர்த்து*
*ஒவ்வொருவரும்*
*ஒருநாள் உதிர வேண்டிய காயும் விதையாக,*
*மற்றொருவருக்கு*
*வளரும் ஒரு நினைவாக...*

*நான்*
*ஒரு கோடி கோடி பிறப்புகள்,*
*ஒவ்வொன்றும்*
*வெற்றிக் குருதியுடன் வெளித் தள்ளப்பட்டு*
*தன் நீள் நகக் கரங்களால்*
*காற்றுக் குழிவில் தழும்பிடும்*
*ஒரு வளர் பொருளாக.*
*நான்*
*ஒரு கோடி கோடி மௌனங்கள்,*
*வேறொருவரின் பாடலில் கோர்க்கப் பெற்ற*
**படிகக் கல் மணிகள் போல.**

**– கமலா தாஸ்**

# Grass Words

Men stay in air-conditioned rooms
Men work getting blisters in the sun
I am a sunflower
Working coolly I get no sun-stroke.

Earthquake crumbles leading banks
Flood dissolves the Parliament
I am an earth-worm
I am secure beneath the earth.

Storm blows away the neon signs of advertisement
Time fades away the mirage nimbus of prophets
I am a glow-worm
Now can take away my glow.

State gambles with men
Men gamble with the state,
I am grass
Let me live and work,
My goodness
The meadows are green
My horse may win some day.

*Gopal Honnalgere*

# புல்லின் வார்த்தைகள்

குளிரூட்டிய அறைகளில் தங்குகின்றனர் மனிதர்கள்
கொப்புளங்கள் எழ உழைக்கின்றனர் வெயிலில்
நான் ஒரு சூரியகாந்திப் பூ;
தண்ணென்று உழைக்கிறேன். சூரியத்தாக்கு
பெறுவதில்லை.

முன்னணி வங்கிகளை நிலநடுக்கம் பொடியாக்குகிறது
வெள்ளம் பாராளுமன்றத்தைக் கரைக்கிறது
நான் ஒரு மண்புழு
பூமிக்கடியில் பாதுகாப்பாக இருக்கிறேன்

விளம்பரங்களின் நியான் அடையாளங்களைப் புயல் வீசியடிக்கிறது
திருநா உரைஞரின் மாய ஒளிவட்டரையைக் காலம் மங்கச் சய்கிறது
நான் ஒரு மின்மினி
என் ஒளிர்வை யாரும் பறித்திட இயலாது

அரசு மக்களுடன் சூதாடுகிறது
மக்கள் அரசுடன் சூதாடுகின்றனர்
நான் புல்
நான் வாழ உழைக்க வேண்டும்
என் நல்ல நேரம்
புல்வெளிகள் பசுமையாயுள்ளன
என் குதிரை ஒருநாள் வெல்லலாம்.

– கோபால் ஹொான்னல்கெரெ

# To a Blue Flower

I would be dismal with all the pearls of the crown of a king:
But I can talk plainly to you, you little blue flower of the Spring!

Here in the heart of September the world that I walk in is full
Of the hot happy sound of the shearing, the rude heavy scent of the wool.

Soon would I tire of al riches or honours or power that they fling;
But you are my own, my own folk, you little blue flower of the Spring!

I was around by the cherries to-day; all the cherries are pale:
The worlds is a women in velvet: The air is the colour of ale.

I would be dismal with all the fine pearls of the crown of a king;
But I can give love-talk to you, you little blue flower of the Spring!

*Shaw Neilson*

# ஒரு நீல மலருக்கு

ஒரு மன்னனின் மகுடத்திலுள்ள அனைத்து முத்துக்களும்
எனக்குச் சலிப்புத் தரலாம்
ஆனால் உன்னிடம் என்னால் பேசிக்கொண்டே இருக்க இயலும்
வசந்தத்தின் சிறுநீலப் பூவே!

இங்கே செப்டம்பரின் இதயத்தில்
நான் நடமாடும் உலகம்
ஆட்டு ரோமம் வெட்டும் வெப்ப இன்பச் சத்தங்களும்
கம்பளியின் கரடுமுரடான கனத்த வாசமும்
நிறைந்துள்ளது.

விரைவில்
அவை அள்ளியெறியும் அனைத்து செல்வங்கள், பெருமைகள்
அல்லது அதிகாரம்
எனக்குக் களைத்துவிடும்.
ஆனால் நீ என்னவள், என் சொந்த மக்கள்,
வசந்தத்தின் சிறுநீல மலரே!

இன்று நான் செர்ரிகள் அருகில் இருந்தேன்.
எல்லாச் செர்ரிகளும் வெளிறியிருக்கின்றன
உலகம் ஒரு வெல்வெட் ஆடைப் பெண்
காற்று மது நிறத்ததாயுள்ளது.

ஒரு மன்னனின் மகுடத்திலுள்ள அனைத்து முத்துக்களும்
என்னைக் கிளர்ச்சியுறச் செய்யலாம்
ஆனால் என்னால் உனக்குக் காதல் மொழி தர இயலும்
வசந்தத்தின் சிறு நீலப் பூவே

– ஷா நெய்ல்சன்

## *Surely God was a Lover*

Surely God was a lover when He bade the day begin
Soft as a woman's eyelid—white as a woman's skin.

Surely God was a lover, with a lover's faults and fears,
When He made the sea as bitter as a wilful woman's tears.

Surely God was a lover, with the madness love will bring:
He wrought while His love was singing, and put her soul in the Spring.

Surely God was a lover by a woman's wile controlled,
When He made the Summer a women thirsty and unconsoled.

Surely God was a lover when he made the trees so fair;
In every leaf is a glory caught from a woman's hair.

Surely God was a lover—see, in the flowers He grows,
His love's eyes in the violet—her sweetness in the rose.

***Shaw Neilso1***

# நிச்சயம் கடவுள் ஒரு காதலனாக இருந்திருக்க வேண்டும்

*நாளின் உதயத்தைப்*
*பெண்ணின் விழி இமைபோல் மிருதுவாக*
*அவள் தோலைப் போல் மென்மையாகத்*
*தொடங்கச் செய்த இறைவன்*
*நிச்சயம் ஒரு காதலனாக இருந்திருப்பான்.*

*பிடிவாதமிக்க பெண்ணின் கண்ணீர் போலக்*
*கடலைக் கசப்பாய்ப் படைத்த இறைவன்*
*நிச்சயம்*
*ஒரு காதலனின் தவறுகளும் ஐயங்களும்*
*கொண்ட காதலனாக இருந்திருப்பான்.*

*தன் காதலி பாடல் இசைத்து*
*அவள் ஆன்மாவை வசந்தத்தில் இழைத்தபோது*
*கடவுள், காதல் கொணரும் சித்தச் சிதறல்*
*கொண்ட காதலனாக நிச்சயம் இருந்திருப்பான்.*

*கோடையைத் தாகம் தேற்றலற்றமையுடைய*
*பெண்ணாகப் படைத்த இறைவன்*
*நிச்சயம்*
*ஒரு பெண்ணின் கவர்ச்சித் தந்திரத்தால்*
*அடக்கப்பட்ட காதலனாக இருந்திருப்பான்*

*மரங்களை இவ்வளவு அழகாக*
*ஒவ்வொரு இலையிலும் பெண்கூந்தலின் எழிலை*
*வைத்த இறைவன்*
*நிச்சயம் ஒரு காதலனாக இருந்திருப்பான்.பார்*

*தான் வளர்க்கும் மலர்களில்*
*வயலெட்டில் தன் காதலியின் விழிகளையும்*
*ரோஜாவில் அவள் இனிமையையும்*
*வைத்த இறைவன்*
*நிச்சயம் ஒரு காதலனாக இருந்திருப்பான்*

*– ஷா நீல்சன்*

# Australia

A nation of trees, drab green and desolate grey
In the field uniform of modern wars
Darkness her hills, those endless outstretched paws
Of Sphinx demolished or stone lion worn away

They call her a young country, but they lie:
She is the last of lands, the emptiest,
A woman beyond her change of life, a breast
Still tender but within the womb is dry;

Without songs, architecture, history:
The emotions and superstitions of younger lands.
Her rivers of water drawn among inland sands,
The river of her immense stupidity

Floods her monotonous tribes from Cairns of Perth,
In them at last the ultimate men arrive
Whose boast is not: 'we live' but 'we survive',
A type who will inhabit the dying earth

And her five cities, like five teeming sores
Each drains her, a vast parasite robber-state
Where second-hand Europeans pullulate
Timidly on the edge of alien shores.

# ஆஸ்திரேலியா

*நவயுகப் போர்களின் களச்சீருடையில்*
*மரங்களின் தேசம், மங்கல் பச்சையும் கவர்ச்சியற்ற சாம்பலுமாய்.*
*இருள் அவள் குன்றுகள்,*
*வெளிநீட்டப்பட்ட சிதையுண்ட சிபிங்ஸ் கூறுகிர்க் காலடிகளாய்,*
*பாழ்பட்ட கற்சிங்கமாய்.*

*இவளை இளைய நாடு என்கின்றனர்; ஆனால் அவர்கள் பொய்யர்கள்:*
*அவள் நிலங்களில் கடைசி, மிகக் காலியானவள்,*
*தன் வாழ்வில் மாறுதலுக்கப்பாற்பட்ட பெண்,*
*இன்னும் இளசான மார்பும், ஆனால் காய்ந்த கருவறையுமாக.*

*பாடல்களும், கட்டிடக் கலைகளும் வரலாறும் இன்றி:*
*தன்னில் இளைய தேசங்களின் உணர்ச்சிகளும் மூடத்தனங்களும்.*
*உள்நாட்டு மண்ணிலிருந்து தண்ணீர் பெற்ற அவள் நதிகள்*
*அவளின் அபரிமித முட்டாள்தனத்தின் ஆறு.*

*அது*
*பெர்த்தின் கெய்ர்ன்ஸ்ஸிலிருந்து அவளது மாறுபாடற்ற*
*பழங்குடியினரை நிறைக்கிறது.*
*அவர்களின் இறுதியாகக் கடைமுடிவான மனிதர்கள் வந்து சேர்கின்றனர்.*
*அவர்களின் பெருமிதக் கூற்று, "நாங்கள் வாழ்கிறோம் அல்ல"*
*"நாங்கள் உயிரோடிருக்கிறோம்"*
*இறந்து கொண்டிருக்கும் பூமியை நிறைக்கும் ஒரு வகையினர்.*

*அவளது ஐந்து நகரங்களும் ஐந்து பொங்கும் புண்கள் போல.*
*ஒவ்வொன்றும் அவளை வெறுமையாக்குகின்றன.*

Yet there ate some like me turn gladly home
From the lush jungle of modern thought, to find
The Arabian desert of the human mind,
Hoping, if still from the deserts the prophets come.

Such savage and scarlet as no green hills dare
Springs in that waste, some spirit which escapes
The learned doubt, the chatter of cultured apes
Which is called civilization over there.

*A.D. Hope*

இரண்டாம் குடி ஐரோப்பியர்கள்
வேற்றுக் கடற்கரை விளிம்புகளில்
ஆரவாரமின்றி மாசுபடுத்தும்
ஒரு பரந்த ஒட்டுண்ணி திருகு – நாடு.

இருப்பினும்
இன்னும் பாலைவனத்தில் தீர்க்கதரிசிகள் தோன்றுவர் என்று நம்பி
மனித மனமெனும் அராபியப் பாலைவனத்தில் தேட
என்னைப் போல்
நவயுக சிந்தையெனும் அடர்பசுங் காட்டில் இருந்து
வந்த சிலர் உள்ளனர்.

அந்தப்
பசுமலைகள் இடந்தர அஞ்சும் திருந்தாத ஒண்சிவப்புப்
பாழில்,
கற்றறிந்தோர் சந்தேகம் தப்பித்த உணர்வொன்று.
நாகரிகம் என்ற பெயரில் அங்கே
கலாச்சாரம் நிறைந்த வாலில்லாக் குரங்குகளின்
பயனில் பேச்சு.

– **ஏ.டி. ஹோப்**

## The Death of the Bird

For every bird there is this last migration;
Once more the cooling year kindles her heart;
With a warm passage to the summer station
Love pricks the course in light across the chart.

Year after year a speck on the map divided
By a whole hemisphere, summons her to come;
Season after season, sure and safely guided,
Going away she is also coming home;

And being home, memory becomes a passion
With which she feeds her brood and straws her ;
Aware of ghosts that haunt the heart's possession
And exiled love mourning within the breast.

The sands are green with a mirage of valleys;
The palm-tree casts a shadow not its own;
Down the long architrave of temple or palace
Blows a cool air from moorland scraps of stone.

# பறவையின் இறப்பு

ஒவ்வொரு பறவைக்கும் இந்த இறுதி இடப்பெயர்வு உண்டு;
மீண்டுமொரு முறை குளிரூட்டும் ஆண்டு அவள் இதயத்தைத்
தூண்டிவிடுகிறது;
கோடை நிலையத்திற்கான வெகுவெதுப்புப் பாதையில்
காதல் பாதைப் படத்தின் குறுக்கே
வெளிச்சப் புள்ளிகளைக் குத்திப் பதிக்கிறது

ஆண்டுமாற்றி ஆண்டு ஒரு முழுஅரை உருளையில்
பிரிக்கப்பட்ட வரைபடத்தில் ஓர் சிறுபுள்ளியாய்
அவளை வருமாறு அழைக்கிறது.
காலம் மாறிக் காலம் உறுதியான சிந்தையுடன்
பாதுகாப்பாக வழிகாட்டப்பட்டு
செல்லுதல் மூலம் அவள் இல்லமும் ஏகுகிறாா்.

வீடு ஏகியதும்
இதயத்தின் உடைமையில் பேயாடும் ஆவிகள்
மற்றும்
நெஞ்சுக்குள் இரங்கும் தாயகம் நீக்கப்பட்ட கால்
ஆகியவற்றின் விழிப்புணர்வுடன்,
நினைவு,
அவள் தன் குஞ்சுகளைப் பசியாற்றவும்
வைக்கோலால் கூடு சேர்க்கவும்
உதவும்
ஒரு முற்றார்வ விளைவாகிறது.

மணற்றேரிகள் கானல் பள்ளத்தாக்குகளால் பசுமை கொண்டுள்ளன
பனைமரம் தன்னதல்லாதவொரு நிழல் இடுகின்றது.

And day by day the whisper of love grows stronger;
That delicate voice, more urgent with despair,
Custom and fear constraining her no longer,
Drives her at last on the waste leagues of air.

A vanishing speck in those inane dominions,
Single and frail, uncertain of her place.
Alone in the bright host of her companions,
Lost in the blue unfriendliness of space.

She feels it close now, the appointed season:
The invisible thread is broken as she flies;
Suddenly, without warning, without reason,
The guiding spark of instinct winks and dies.

Try as she will the trackless world delivers
No way, the wilderness of light no sign,
The immense and complex map of hills and rivers
Mocks her small wisdom with its vast design.

And darkness rises from the eastern valleys,
And the winds buffet her with their hungry breath,
And the great earth, with neither grief nor malice,
Receive the tiny burden of her death.

*A.D.Hope*

ஆலயம் அல்லது அரண்மனையின் நீளத் தூலத்தின்கீழ்
தரிசுநிலக் கருங்கல் உடைசல் குவியல்களினின்று
ஒரு குளிர் காற்று வீசுகிறது
நாட்செல்லச்செல்ல காதல் மென்பேச்சு வலிதாக வளர்கிறது
பழக்கம் பயம் ஆகியன இனியும் தன்னை அடக்கிடாது
ஆர்வ அதிகரிப்பின் அவசரத்தில் அந்த மென்குரல்
அவளை வறட்டுக் காற்றுகளின்கூட்டிணைவுமீது செலுத்துகிறது.

அந்தப் பெரு வெட்டவெளியில் மறையும் ஒரு புள்ளி
தனியா, நலிந்து தன் இடம் தெளிவாய்த் தெரியாதவளாய்!
தனது ஒளிமிகு கூட்டாளிகள் கூட்டத்தில் தனியாக,
வெளியின் ஊதா நட்பின்மையில் காணாமல்போய்
குறித்த பருவம் அவள் தற்போது அருகில் உணர்கிறாள்:
அவள் பறப்பில் கண்ணுக்குத் தெரியாத நூல் தெறித்துவிட்டது.
திடீரென்று. எச்சரிக்கை ஏதுமின்றி, காரணம் ஏதுமின்றி,
வழிகாட்டும் உள்ளுணர்வுப் பொறி கண்சிமிட்டி இறக்கிறது.

அவள் எவ்வளவு முயன்றும் சுவடற்ற உலகம்
பாதையெதும் வழங்கவில்லை.
ஒளியின் காடு அடையாளமெதும் காட்டவில்லை
குன்றுகள், நதிகளின் அளவற்ற செறிவுறு வரைபடம்
தனது அளப்பறு உருவத்துடன்
அவளின் குறுஅறிவினை எள்ளுகிறது.

கீழைப் பள்ளங்களிலிருந்து இருள் எழுகிறது
காற்றுகள் தம் பசித்த மூச்சுடன் அலைக்கழிக்கின்றன
பரந்தகன்ற உலகு.
அவளது இறப்பின் சிறுசுமையை
சோகமோ அல்லது வன்மமோ இன்றி
ஏற்றுக்கொள்கிறது.

– ஏ.டி. ஹோப்

## Clock and Heart

The trap of time surprised my heart-
its hidden teeth of circumstance
that draw the child into the clock
upon the cogs of tick and tock.
No logic, artifice nor chance
could silence my protesting heart.

Then poetry's electing shade
enclosed me with its darkening ray,
left me no face to recognize,
no eyes to meet my search eyes.
The solitude of poetry
locked me within is second shade.

To light that shade and set me free
no flame had power but human love.
Against my will I caught and burned,
but then the key of time was turned,
the dark ray blazed, and from above
it lit the hour that set me free.

Set free at last in human time-
that long-rejected tyranny-
I found in ordinary love
the solitudes of poetry.

*Judith Wright*

# கடிகாரமும் இதயமும்

காலமெனும் பொறி என் இதயத்தை வியக்க வைத்தது
டிக் டாக் எனும் சக்கர இயந்திரத்தால்
குழந்தையை
அதன் சூழ்நிலையென்னும் ஒளிந்த பற்கள்
கடிகாரத்தினுள் இழுக்கும்.
எந்தத் தருக்கமோ, தந்திரமோ அல்லது இடையூரோ
எதிர்க்கும் என் இதயத்தை
ஒலியிழக்கச் செய்ய இயலாது

பின்
கவிதையின் தேர்ந்த நிழல்
என்னை அடையாளம் காண முகம் அறச் செய்து
என் தேடும் கண்களைச்
சந்திக்கக் கண்களும் இல்லாமல்,
தன் இருளும் கதிரில் என்னை மூடியது.
கவிதையின் ஏகாந்தம்
தன் இரண்டாம் நிழலுக்குள்
என்னைப் பூட்டி வைத்தது.

அந்த நிழலுக்கு ஒளியூட்டி
என்னை விடுவிக்க
மனித அன்பன்றி
எந்த நெருப்புக்கும் சக்தியிருக்கவில்லை.
என் விருப்பத்திற்கு எதிராக
நான் பற்றிக் கொண்டு எரிந்தேன்.
அந்நேரம் காலத்தின் சாவி திருகப்பட்டிருந்தது.

கருங்கதில் ஒளிர்ந்தது,
மேலிருந்து
நான் விடுவிக்கப்பட்ட நாழிகையை வெளிச்சமிட்டது.
கடைசியாக மனித காலத்தில் விடுவிக்கப்பட்டு –
பல காலமாக மறுக்கப்பட்ட கொடுங்கோல் –
சாதாரண அன்பில்
கவிதையின் ஏகாந்தங்களை அறிந்தேன் நான்.

– ஜூடித் ரைட்

## To Any Poet

Take salt upon your tongue.
And do not feed the heart
With sorrow, darkness or lies:
These are the death of art.

Living is thirst for joy;
That is what art rehearses.
Let sober drunkenness give
Its splendor to your verses.

Move like the sable swan
On the luminous expanse;
In sight out of range
Of barking ignorance.

*James McAuley*

# எந்த ஒரு கவிஞனுக்கும்

*உனது நாவில் உப்பிட்டுக் கொள்*
*இதயத்திற்கு வேதனை, இருள் அல்லது பொய்மை ஊட்டாதே*
*இவை கலையின் இறப்பு.*

*வாழ்தல் இன்ப தாகம்;*
*அதையே கலை ஒத்திகை செய்கிறது.*

*வெறியற்ற போதை*
*தன் மென்மையை*
*உன் கவிகளுக்கு வழங்கட்டும்.*

*கரிய அன்னத்தைப் போல*
*சுடரொளி விரிவில் அசை.*
*குலைக்கும் அறியாமையின்*
பார்வை எல்லைக் கப்பால்.

**– ஜேம்ஸ் மெக்காலே**

## Youth Leader

In the wedge head the eyes are
Too glibly moved, under hair combed forward
In the Roman fashion.
A programme in a hair style.
His torso holds the promise of a paunch.
He is big with history
And the streets go crazy at his lifted hand.
How many dead will bloat the gutters
When he learns to lower it.

*Vincent Buckley*

# இளைஞர் தலைவன்

அவனது ஆப்பு வடிவத் தலையில்
கண்கள்
முன்னோக்கி ரோமானிய முறையில் சீவப்பெற்ற
தலை முடியின் கீழ்
வழவழப்பாக அசைந்தன.

ஒரு தலைவாரல் முறையில் ஒரு நிகழ்வு
அவனது உடலமைப்பு வருங்கால தொப்பைக்குக்
கட்டியங் கூறுகிறது.

அவன் வரலாறு நிறையப் பெற்றிருக்கிறான்.
தெருக்கள் அவனது உயர்த்திய கரங்களில்
பைத்தியமாகின்றன. வெறிமயக்கங் கொள்கின்றன

அதை அவன் இறக்கிடக் கற்றுக்கொள்ளும்போது
இறந்தோர் எத்தனை பேர்
சாக்கடையில் ஊறிக் கிடப்பார்களோ?

– வின்சென்ட் பக்ளி

## Parents

My father asks me how I stand it all,
The work, the debts, the spite. My mother talks
As though I were a famous man and yet
Unguarded somehow, too fragile to touch.
It's their needs, not mine, that flutter here
In the questions and the anecdotes. I stare
At the rest encroaching on the walnut-branches
Or the pile of litter where the biggest pine-tree
Used to stand, before my absence killed it.
Their door has a vine over it; they murmur
Endearments to the animals, and cry
At small wrongs. Which is the oldest of us three?

Facts sound like charges. The least important man
Is a legend in his neighbour's living-room,
Menacing and remarkable as the lightning
That ran from tree to tree about the house
So recently, like the shining of its ghosts,
I nod, but the names, perils, dates mean nothing.
and where that's true, the deepest bonds are lost.
How will the vine bear this year? I feel

# பெற்றோர்

*என் தந்தை இதையெல்லாம் நான் எப்படித் தாங்குகிறேன்*
*என்று கேட்கிறார்:*
*வேலை, கடன்கள், வன்மம்.*
*என் தாய்*
*நான்*
*எப்படியோ காவலற்ற*
*தொட்டால் உடையக் கூடிய*
*ஏதோ புகழ்பெற்ற*
*ஒரு மனிதன் போல் பேசுகிறாள்.*

*இந்தக் கேள்விகளிலும் நிகழ்வுகளிலும்*
*பதைபதைப்பன*
*என்னுடைய தேவைகளல்ல; அவர்களுடையவை.*
*வால்நட் கிளைகளில் அத்துமீறும் துரு*
*என் இன்மையில் கொல்லப்பட்ட*
*மிகப்பெரும் பைன்மரம் இருந்த இடத்தில் உள்ள குப்பைகூளம்*
*ஆகியவற்றை*
*நான் திகைத்து விழிக்கிறேன்.*

*அவர்கள் கதவின் மீது ஒரு திராட்சைக்கொடி படர்ந்துள்ளது.*
*அவர்கள் மிருகங்களிடம் கொஞ்சி முணுமுணுக்கின்றனர்.*
*சிறுசிறு தவறுகளுக்குக் கூப்பாடிடுகின்றனர்.*
*எங்கள் மூவரில் யார் மிக மூத்தவர்?*

My heart growing till my thoughts are hoarse
Any the old branches pick at the heap of leavings.
There is so much I don't recall. They stand,
Timid, waving to watch me go, barely
Visible in the window's copper sheen.

*Vincent Buckley*

உண்மைகள் புகார்களாய்த் தோன்றுகின்றன.
எந்தச் சாதாரண மனிதனும்
தன் அண்டை அயலார் பகல்நேர அறையில் ஒரு புராணமே.
சமீபத்தில் வீட்டைச் சுற்றி
மரத்திலிருந்து மரம் ஏறிய அச்சுறுத்தும் பளீரென்ற மின்னலைப்போல,
அதன் ஆவிகளின் மினுக்கம் போல
நான் தலையை ஆட்டுகிறேன்.
ஆனால்,
பெயர்கள், இடர்கள், தேதிகள்
ஏதும்
ஒரு பொருட்டாகவில்லை.
அந்த உண்மையில்
ஆழமான பிணைப்புகள் எல்லாம் காணாமல் போய்விட்டமை
தெரிகிறது.

இவ்வாண்டு திராட்சை எப்படி ஈனும்?
என் சிந்தனைகள் கம்மும் வரை,
பழங் கிளைகள் சடுகுக் குவியல்களை அடையும்வரை
என் இதயம் வளர்வதாக உணர்கிறேன்.

நான்
நினைவுக்குக் கொண்டு வராததும்
எவ்வளவோ இருக்கிறது.
அவர்கள் குழைந்தொதுங்கி நிற்கின்றனர்.
நான் செல்வதைக் காணக் கையசைத்துக் கொண்டு,
சன்னலின் பித்தளைப் பளபளப்பில்
தெரிந்தும் தெரியாமலும்.

– வின்செண்ட் பக்ளி

# Exit

Behavior is more human than we know.
All very well to quote the Book of Rules;
The catch is, if you stay, then I must go.

Some favour intermittence, some a flow;
The student keeps in touch with all the schools.
Behaviour is more human then we know.

Most fellow travellers very fast with slow;
Adherence to a time-table soon cools.
The catch is, if you stay, then I must go.

The statistician hasn't got a show;
Mere expertise in figures is for fools
Behaviour is more human than we know.

The small rains fall, the little winds do blow.
A myriad tadpoles pullulate in pools.
The catch is, is you stay, then I must go.

Mergers may fail, though sense of oneness grow;
Psychology can leave behind its tools.
Behaviour is more human than we know.
The catch is, if you stay, then I must go.

*Bruce Beaver*

# வெளியேற்றம்

நடத்தையானது நாம் அறிவதைவிட மனிதமானது
விதிகளின் புத்தகத்தை மேற்கோள் காட்டுவது எளிதுதான்.
உண்மை என்னவெனில் நீ இருந்தால் நான் செல்ல வேண்டும்.

சிலர் தொடர்பறுத்தலை ஆதரிக்கின்றனர்; சிலர் ஓடுதலை;
மாணவன் அனைத்துப் பள்ளிகளுடனும் தொடர்பு வைத்துக் கொள்கிறான்.
நடத்தை என்பது நாம் அறிந்ததைவிட மனிதமானது.

பெருவாரியான உடன்பயணிகள் மெதுவானவர்களிடமிருந்து
வேகமாக மாறியமைகின்றனர்.
ஒரு கால அட்டவணையுடன் ஒன்றியிருப்பது விரைவில் அணைந்து விடுகிறது.
பொருள் என்னவெனில் நீ இருந்தால் நான் செல்ல வேண்டும்.

புள்ளியியலாளன் மக்களைக் கவர்வதில்லை.
வெறும் எண்களில் பெருந்திறன் முட்டாள்களுக்குரியது.
நடத்தை என்பது நாம் அறிந்ததைவிட மனிதமானது.

சிறுமழை விழுகிறது, லேசான காற்றுகளும் வீசுகின்றன.
ஒரு பத்தாயிரம் தலைப்பிரட்டைகள் குளங்களில் பல்கிப் பெருகுகின்றன
கொளுச்சொல் என்னவெனில் நீ தங்கினால் நான் செல்ல வேண்டும்.

ஒற்றுமை உணர்வு வளர்த்திடினும் ஒன்றச் செய்தவை அழிந்திடலாம்.
மனோதத்துவம் தன் கருவிகளைப் பின்விட்டுச் செல்லலாம்.
நடத்தை என்பது நாம் நினைப்பதைவிட மனிதமானது.
மறைபொருள் என்னவெனில் நீ தங்கினால் நான் செல்ல வேண்டும்.

– ப்ரூஸ் பீவர்

## My wish for My Land

The Woman:

My wish for my land is that ladies be beautiful,
that horses be spirited and gentlemen courteous
and all moustaches faultless.

My wish for my husband is that he read Tennyson.
My wish for my daughter is that she be interesting
and capture a million acres.

My wish for my sons is that they be chivalrous,
sun-tanned and tall, and that they bestow on me,
perhaps a dozen grandsons.

My wish for my  house is that linen be Irish
and tableware sterling, and that the piano
go never too long unplayed.

My wish for myself if that I grow matronly,
straying in dove-grey silk through the roses
under the far far harking of the crows.

***Randolph Stow***

# என் தேசத்திற்கு என் ஆசை

*பெண்:*
*என் தேசத்திற்கு என் ஆசை என்னவெனில்*
*பெண்கள் எல்லோரும் அழகாகவும்*
*குதிரைகள் உத்வேகத்துடனும்*
*ஆண்மக்கள் அன்பாதரவாகவும்*
*அனைத்து மீசைகளும்*
*குறைவின்றியும் இருத்தல் வேண்டும்.*

*என் கணவருக்கு என் ஆசை என்னவெனில்*
*அவன் டென்னிசனை வாசிக்க வேண்டும்.*
*என் மகளுக்கு என் ஆசை என்னவெனில்*
*அவள் ஆர்வம் ஊட்டுமாறு இருக்கவும்*
*ஒரு கோடி ஏக்கர்களைக் கொள்ளை கொள்ளவும் வேண்டும்.*

*என் மகன்களுக்கு என் ஆசை எதுவெனில்*
*அவர்கள் வீரப் பண்பினராக*
*சூரியப் பழுப்புடன்*
*உயரமாகவும்*
*ஒரு பன்னிரண்டு பேரன்களை*
*எனக்கு வழங்கவும் வேண்டும்.*

*என் இல்லத்துக்கு என் விழைவு என்னவெனில்*
*துணிகள் அயர்லாந்தினவாகவும்*
*மேசைப் பொருட்கள் தங்கத்திலும்*
*பியானோ*
*ஒருகாலமும்*
*அதிகம் வாசிக்கப்படாது போகாமலிருக்கவும்*
*வேண்டும்.*

*என்னைப் பற்றிய என் ஆசை*
*நான் வாழ்வரசியாக மாறி*
*ரோஜாக்களினூடே*
*தொலை தூரத்தில் கரையும் காகங்களுக்குக் கீழே*
*புறாச் சாம்பல் நிறப் பட்டிலே*
*திரிந்து கொண்டிருக்க வேண்டும்.*

*— ரண்டால் ஸ்டோ*

# The Two Sisters

On the Island of the Spirits of the Dead,
one of two sister talks.
'We must make a canoe and follow the way
the sun walks'.

They've filled the canoe with sacred
rannga things,
and paddled away into the night
singing ritual songs.

'Sister, look back!' the first sister calls.
'Do you see the morning star?'

Her sister looks out along their wake
'Nothing Nothing's there'.

The little sister has fallen asleep.
Again her sister calls,
'Sister, look back for the morning star'.
'Nothing, Nothing at all'.

A spear of light is thrown across
the sea and lies far
ahead upon the sister's course.
'Sister, the morning star'.

# இரு சகோதரிகள்

*இறந்தோர் ஆவிகளின் தீவில்*
*இரு சகோதரிகளில் ஒருத்தி பேசுகிறாள்:*
*"நாம் ஒரு வள்ளம் செய்துகொண்டு*
*சூரியன் நடக்கும் பாதையைத்*
*தொடர்ந்து செல்ல வேண்டும்".*

*அவர்கள் வள்ளத்தில் புனித*
*பொருட்களை நிரப்பிக் கொண்டு*
*சடங்குமுறைப் பாடல்களைப் பாடிய வண்ணம்*
*இரவினுள் துடுப்பிட்டுச் சென்று விட்டனர்.*

*"அக்கா திரும்பிப் பார்" முதல் சகோதரி கூப்பிடுகிறாள்*
*'அதிகாலை விண்மீன்' உனக்குத் தெரிகிறதா?'*
*அவள் சகோதரி அவர்கள் பாதையெங்கும் பார்க்கிறாள்*
*"இல்லை, அங்கு ஏதுமில்லை"*

*இளையவள் தூங்கிப் போய்விட்டாள்.*
*மீண்டும் அவள் சகோதரி அழைக்கிறாள்,*
*'தங்காய், காலை நட்சத்திரம் தெரிகிறதாவெனத் திரும்பிப் பார்'*
*'இல்லை, ஏதுமில்லை!'*

*ஒரு ஒளி வேல் சகோதரிகளின் பாதைக்கு வெகுதூரத்தில்*
*கடலின் குறுக்கே வீசப்பட்டுள்ளது.*
*'அக்கா, காலை விண்மீன்'*

*சூரியன் மேல் வந்து வானில் நடக்கிறது*
*மீசை மீனொன்று முன்னே நீந்தி*
*சகோதரிகள் பாடிக் கொண்டிருக்க*
*கடலுக்கு வெளியே துள்ளிப் பாய்கிறது.*

The sun comes up and walks the sky.
A fish with whiskers swims
ahead, and leaps out of the sea,
while the sisters sing.

Day and night, and day and night,
the sisters are gone
with the morning star and the leaping fish
and the sky-walking sun.

The sisters, hoar with dried salt spray,
the semen of the sea,
make landfall where parrots scream,
from paperbark trees.

The sisters beach the bark canoe,
unload the rannga things.
They thrust one in the earth. From there
the first goanna comes.

They've gone inland. Their digging sticks
make sacred springs.
They leave behind them rannga forms
for all living things.

பகலும் இரவும் பகலும் இரவுமாகக்
காலை விண்மீனுடன், பாயும் மீனுடள்
வான் நடக்கும் கதிருடன்
சகோதரிகள் சென்றுவிட்டனர்.

கடலின் விந்தான காய்ந்த உப்புத் தூவலால்
வெண்மை பூத்த சகோதரிகள்
தாள்ப்பட்டை மரங்களினின்று கிளிகள்
அலறும் இடத்தில் தரையிறங்குகின்றனர்.

அவர்கள் அந்த மரவள்ளத்தைக்
கடற்கரை நிறுத்தி
ரன்ங்கா பொருட்களைச் சுமையிறக்குகின்றனர்.
ஒன்றை பூமியினுள் அமிழ்த்துகின்றனர்.
அங்கிருந்து ஆதி உயிர் வருகிறது.

அவர்கள் உள்நாடு சென்றுள்ளனர்.
அவர்களது தோண்டும் கம்புகள் புனித ஊற்றுகளை உருவாக்குகின்றன.
அவர்கள் ரன்ங்கா – உருவங்களை
அனைத்து உயிரினங்களுக்கும் விட்டுச் செல்கின்றனர்.

உணவு சேகரிக்கத்
தம் ஊசலாடும் பைகளை
ஒரு மரத்தில் தொங்க விட்டு
அவர்கள் வெளியே சென்றுள்ளனர்.

அவர்கள் இல்லாதபோது
மனிதர்கள் வந்து
அவர்களது புனிதச் சடங்குகளைத்
திருடுகின்றனர்.

Out gathering food, the sisters have hung
their dilly-bags in a tree.
While they're away, men come and steal
their sacred ceremonies.

The sisters hear men singing and
song–sticks' 'tjong-tjong'.
'Cover your ears. We cannot hear
the sacred song'.

'O' all our sacred ceremonies
belong now to the men.
We must gather food, and bear
and rear children.'

*Related by Manoowa*

*சகோதரிகள்*
*மனிதர்கள் பாடுவதையும்*
*அவர்களது இசைக் குச்சுகளின்*
*'ட்ஜாங் – ட்ஜாங்' கையும்*
*செவியுறுகின்றனர்,*
*'உன் செவிகளை மூடிக்கொள்*
*நம்மால் புனிதப் பாடலைக் கேட்க முடியாது.'*

*'ஓ நமது புனிதச் சடங்குகள் அனைத்தும்*
*தற்பொழுது மனிதர்களுக்குச் சொந்தமாகிவிட்டன.*
*நாம்*
*உணவு சேகரித்து,*
*குழந்தைகளைச் சுமந்து*
*வளர்க்க வேண்டும்.'*

**மனூவாவால் எடுத்துரைக்கப் பெற்றது**

## I Thank you God

I thank you God for creating me black,
For making of me
Porter of all sorrows,
Setting on my head
The World.

I wear the Centaur's hide
And I have carried the World since the first morning.

White is a colour for special occasions
Black the colour for every day
And I have carried the World since the first evening.

I am glad
Of the shape of my head
Made to carry the World,
Content
With the shape of my nose
That must snuff every wind of the World
Pleased
With the shape of my legs
Ready to run all the heats of the World.

# இறைவா, உனக்கு நன்றி

*இறைவா நன்றி,*
*என்னைக் கறுப்பாகப் படைத்ததற்கு.*
*அனைத்து துன்பங்களுக்கும்*
*என்னைச் சுமையாளியாக்கியதற்கு,*
*என் தலைமீது*
*இந்த உலகைத் தூக்கி வைத்ததற்கு.*

*நான் கரும்பரித் தோலை அணிகிறேன்*
*முதல் காலையிலிருந்து உலகைச் சுமந்திருக்கிறேன்*

*வெள்ளை*
*குறிப்பிட்ட நிகழ்வுகளுக்கான நிறம்,*
*கறுப்பு ஒவ்வொரு நாளுக்கும் உரியது*
*நான் உலகை*
*முதல் மாலையிலிருந்து சுமந்திருக்கிறேன்.*

*எனக்கு மகிழ்ச்சி,*
*இந்த உலகைச் சுமப்பதற்கு வாகாகச்*
*செய்யப்பட்ட என் தலையின் வடிவு குறித்து.*
*திருப்தி,*
*இந்த உலகின் ஒவ்வொரு காற்றையும்*
*உள் அடைத்துக் கொள்ள வேண்டிய*
*என் மூக்கின் வடிவு குறித்து.*
*நான் இன்புறுகிறேன்.*
*உலகின் எல்லாத் தகுதிச் சுற்றுகளிலும்*
*ஓடத் தயாராக இருக்கும்*
*என் கால்களின் வடிவு குறித்து.*

I thank you God for creating me black
For making of me
Porter of all sorrows.

Thirty- six swords have pierced my heart
Thirty-six fires have burnt my body.
And my blood on all calvaries has reddened the snow,
And my blood at every dawn has reddened all nature.

Still I am
Glad to carry the World,
Glad of my short arms
of my long arms
of the thickness of my lips.

I thank you God for creating me black.
White is a colour for special occasions
Black the colour for every day
And I have carried the World since the dawn of time.
And my laugh over the World, through the night, creates the Day.

I thank you God for creating me black

*Bernard Dadie*

நன்றி இறைவா,
என்னைக் கறுப்பாகப் படைத்ததற்கும்
எல்லாத் துன்பங்களின்
சுமையாளி ஆக்கியதற்கும்.

முப்பத்தியாறு வாட்கள் என் இதயத்தைத் துளைத்துள்ளன.
முப்பத்தியாறு நெருப்புகள் என் உடலைச் சுட்டுள்ளன.
எனது குருதி எல்லாக் கல்வாரிகளிலும்
பனியைச் சிவக்கச் செய்துள்ளது.
எனது இரத்தம்
ஒவ்வொரு விடிகாலையிலும்
இயற்கையைச் செந்நிறமாக்கியுள்ளது.

இருப்பினும்
இந்த உலகைச் சுமப்பதில் எனக்கு மகிழ்ச்சியே.
எனது குட்டைக் கரங்கள்
எனது நீளக் கால்கள்
என்று உதடுகளின் தடிமன்
குறித்து மகிழ்ச்சியே.

என்னைக் கறுப்பாகப் படைத்தற்கு உனக்கு நன்றி இறைவா.
வெண்மை, குறிப்பிட்ட நிகழ்வுகளுக்கான வண்ணம்.
கறுப்பு ஒவ்வொரு தினத்திற்குமான நிறம்
நான் உலகைக்
காலம் விடிந்தபோதிலிருந்து சுமக்கிறேன்.
உலகெங்கும் இரவு முழுதும் படரும் என் சிரிப்பு
பகலை உருவாக்குகிறது
கடவுளே என்னைக் கறுப்பாகப் படைத்ததற்கு நன்றி.

– பர்னர்ட் பி.டாடி

## Three birds

The bird of iron the bird of steel
that rent the morning clouds
and wanted to snatch the stars
is hiding shamefully
beyond day
in an unreal cave.

The bird of flesh the bird of feathers
that thrust a tunnel through the wind
in quest of the moon whom he saw in his dreams
hanging in the branches
plunges like the evening
into a thicket of leaves.

But he who is without body
bewitches the guardian of skulls
with his stammering song.
He opens his sounding wings
hurries to pacify space
and only returns immortal.

*Rabearivel*

# மூன்று பறவைகள்

*காலை முகில்களைப் பிளந்து*
*விண்மீன்களைப் பற்றியிழுக்க விழைந்த*
*இரும்பு எஃகுப் பறவை*
*பகலுக்குப் பின்னால்*
*ஒரு பொய்யான குகையில்*
*கேவலமாக ஒளிந்து கொண்டிருக்கிறது.*

*தன் கனவுகளில்*
*கிளைகளில் தொங்கிக் கொண்டிருக்கக் கண்ட*
*நிலவைத் தேடிக்*
*காற்றினூடே ஓர் குகையாய்த் தைத்த*
*தசையும் சிறகுமான பறவை*
*மாலையைப் போல்*
*இலைக் காட்டினுள்ளே அமிழ்கிறது.*

*ஆனால்*
*உடலே இல்லாதவன்*
*மண்டையோடுகளின் காவலனைத்*
*தன் மழலை இசையால் மயக்குகிறான்.*
*தனது ஒலிக்கும் சிறகுகளைத் திறந்து*
*வெட்ட வெளியை அமைதியுறச் செய்ய விரைந்து*
*இறப்பற்றவனாகத் திரும்புகிறான்.*

**ரேப்ரிலெலோ**

## Once upon A Time

Once upon a time, son,
they  used to laugh with their hearts
and laugh with their eyes;
but now they only laugh with their teeth,
while their ice-block-cold eyes
search behind my shadow.

There was a time indeed
they used to shake hands with their hearts;
but that's gone, son.
Now they shake hands without hearts
while their left hands search
my empty pockets.

'Feel at home'! 'Come again';
they say, and when I come
again and feel
at home, once, twice,
there will be no thrice –
for then I find doors shut on me.

# முன்னொரு காலத்தில்

*மகனே, முன்னொரு காலத்தில்*
*அவர்கள்*
*தங்கள் இதயங்களாலும்*
*கண்களாலும் சிரித்தனர்.*

*ஆனால் இப்போது*
*தங்கள்*
*பனிக்கட்டிக்*
*குளிர் கண்கள்*
*என் நிழலுக்கும் பின்னே தேடத்*
*தம் பல்லால் மட்டுமே சிரிக்கின்றனர்.*

*அவர்கள்*
*தம் இதயத்தால் கைகுலுக்கிய*
*ஒரு காலம் இருந்தது.*
*ஆனால் அது போய்விட்டது மகனே*
*தற்போது*
*அவர்களது இடது கரங்கள்*
*என் காலிப் பாக்கெட்டுகளைச் சோதனையிட,*
*இதயமற்றுக் கை குலுக்குகிறார்கள்.*

*“தங்கள் இல்லமாகக் கொள்க”*
*“மீண்டும் வருக”*
*என்கிறார்கள்.*
*நான் மீண்டும்*
*ஒரு முறை இருமுறை வந்து*
*என் வீடு போல் உணர்ந்தால்*

So I have learned many things, son.
I have learned to wear many faces
like dresses—homeface,
officeface, streetface, hostface,
cocktailface, with all their conforming smiles
like a fixed portrait smile.

And I have learned, too,
to laugh with only my teeth
and shake hands without my heart.
I have also learned to say, 'Goodbye',
when I mean ' Good-riddance',
to say 'Glad to meet you',
without being glad; and to say 'It's been
nice talking to you', after being bored.

But believe me, son.
I want to be what I used to be
when I was like you. I want
to unlearn all these muting things.
Most of all, I want to relearn
how to laugh, for my laugh in the mirror
shows only my teeth like a snake's bare fangs!

மூன்றாவது முறை என்று
ஒன்று இருக்காது
ஏனெனில்
அந்நேரம்
எனக்குக் கதவுகள்
மூடப்பட்டிருப்பதைக் காண்கிறேன்.

எனவே நான் பல விஷயங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறேன், மகனே.
நான் பல முகங்களை அணியக் கற்றுக்கொண்டேன்,
ஆடைகள் போல – வீட்டு முகம்,
அலுவலக முகம், தெரு முகம், விருந்தோம்புவோன் முகம்,
தோரணை முகம்,
ஒரு நிலையான சித்திரச் சிரிப்பு போல,
அவற்றுக்கான சிரிப்புக்களுடன்.

மேலும்
பல்லால் மட்டும் சிரிக்கவும்
இதயம் ஒதுக்கிக் கை குலுக்கவும் கூட
நான் கற்றுக் கொண்டேன்.
"நல்லது தொலைந்தான்" என எண்ணிக்கொண்டு
"நலமே செல்க" எனவும்
மகிழ்ச்சியே இன்றி
"உங்களைச் சந்தித்ததில் மகிழ்ச்சி" எனவும்
சலிப்பு அடையப் பெற்ற பின்
"உங்களுடன் பேசிக் கொண்டிருந்தது நன்றாக இருந்தது"
எனவும் கூடக் கற்றுக் கொண்டேன்.

ஆனால் என்னை நம்பு மகனே,
நான் உன்னைப்போல் இருந்த பொழுது
எதுவாக இருந்தேனோ
அதுவாக விரும்புகிறேன்.
இந்த அனைத்து மந்தமூட்டும் செயல்களையும்
கற்றதற்றமை பெற விரும்புகிறேன்.

So show me, son,
how to laugh; show me how
I used to laugh and smile
once upon a time when I was like you.

*Gabriel Okara*

அனைத்திற்கும் மேலாக
நான்
மீண்டும் சிரிக்கக்
கற்றுக் கொள்ள விழைகிறேன்.
ஏனெனில்
கண்ணாடியில் என் சிரிப்பு
என் பற்களை மட்டுமே காட்டுகிறது
பாம்பின் திறந்த கடிபற்கள் போல.

எனவே, என் மகனே,
எனக்குச் சிரிப்பது எப்படி என்று காண்பி.
முன்னொரு காலத்தில்
நான் உன்னைப் போல் இருந்தபோது
எப்படிச் சிரித்தேன்
புன்முறுவல் பூத்தேன்
என்று எனக்குக் காண்பி.

**கேப்ரியல் ஒகாரா**

## Home-Coming Son

Look where you walk unholy stranger
This is the land of the eighth harmony
In the rainbow: Black.
It is the dark side of the moon
Brought to light
This is the canvas of God's master stroke.

Out, of your foreign outfit unholy stranger
Feel part of the great work of art
Walk in peace, walk alone, walk tall,
Walk free, walk naked
Let the feelers of your motherland
Caress your bare feet
Let Her breath kiss your naked body.

But watch, watch where you walk forgotten stranger
This is the very depth of your roots: Black.
Where the tom-toms of your fathers vibrated
In the fearful silence of the valleys
Shook, in the colossus bodies of the mountains
Hummed, in the deep chest of the jungles.
Walk proud.

# வீடு திரும்பல் மகனே

*நீ எங்கே நடக்கிறாய் என்பதைக் கண்ணுறு புனிதமறு அந்நியனே*
*வானவில்லின் எட்டாவது ஒருங்கிணையின் பூமியிது: கறுப்பு.*

*இது வெளிச்சத்துக்குக் கொண்டு வரப்பெற்ற*
*நிலவின் மறுபக்கம்*
*இது*
*கடவுளின் குறையறு ஓவியத்தின் சித்திப் படாம்.*
*வெளியேறு,*
*உன் அந்நிய உடுப்பிலிருந்து,*
*புனிதமறு வெளியாளே*
*இப்பெருங் கலைப்படைப்பின் ஓர் அங்கமாக உன்னை உணர்ந்திடு.*

*அமைதியாக நட, தனித்து நட,*
*நிமிர்ந்து நட, விடுதலையுடன் நட,*
*நிர்வாணமாய் நட.*
*உனது தாய்நாட்டின் உணர்ச்சியூட்டிகள்*
*உன் வெற்றுப் பாதத்தைத் தடவித் தரட்டும்,*
*அவளது மூச்சு உன் வெற்றுடம்பை முத்தமிடட்டும்.*

*ஆனால் கவனமாயிரு,*
*நீ எங்கே நடந்துகொண்டிருக்கிறாய் என்பதைக் கவனி,*
*மறக்கப்பட்ட அந்நியனே,*
*இதுதான் உன் சொந்த வேர்களின் இருப்பிடம்: கறுப்பு.*

*உன் தந்தையின் டமடம முரசுகள்*
*பயமுறுத்தும் பள்ளத்தாக்குகளின் அமைதியில் அதிர்ந்த,*
*வானுயர்ந்த மலைகளின் உடம்புகளை உலுக்கிய,*
*அடர் கானகங்களின் ஆழ்இதயத்தில் முணுமுணுப்பாய் இசைத்த*
*அதே இடம்,*
*பெருமையுடன் நடையிடு.*

Watch, listen to the calls of the ancestral spirits prodigal son
To the call of the long awaited soil
They welcome you home, home. In the song of birds
Your hear your suspended family name
The winds whisper the golden names of your tribal warriors
The fresh breeze blown onto your nostrils
Floats their bones turned to dust
Walk tall. The spirits welcome
Their lost-son returned.

Watch, and out of your foreign outfit brother
Feel part of the work of art
Walk in laughter, walk in rhythm, walk tall
Walk free, walk naked.
Let the roots of your motherland caress your body
Let the naked skin absorb the home-sun and shine ebony.

*Tsegaye Gabre-Medhin*

*கவனி,*
*முன்னோர் ஆவிகளின் அழைப்புக் குரல்களைச் செவியுறு,*
*மனந்திரும்பிய மைந்தனே.*
*நெடுங்காலம் காத்திருந்த மண்ணின் அழைப்பைச் செவியுறு.*
*அவை உன்னை வீட்டுக்கு, வீட்டுக்கு வரவேற்கின்றன.*

*பறவைகளின் இசையில்*
*பரணிலிடப்பட்ட உன் குடும்பப் பெயரை*
*நீ கேட்கிறாய்.*

*தென்றல்கள்*
*உன் பழங்குடிப் போர் வீரர்களின் பொற்பெயர்களைக்*
*கிசுகிசுக்கின்றன*

*புத்திளங்காற்று உன் நாசிகளில் வீசுகிறது*
*தூசியான அவர்களின் எலும்புகளைத் தூவுகிறது.*

*நிமிர்ந்து நட,*
*ஆவிகள் காணாமல்போய்த் திரும்பிய தம் மகனை*
*வரவேற்கின்றன.*

*கவனி,*
*உன் வெளிநாட்டு உடையினின்று வெளியேறு.*
*இப்பெருங் கலைப்படைப்பின் ஓர் அங்கமாக*
*உன்னை உணர்ந்திடு*

*சிரிப்பில் நட,*
*தாளத்தில் நட,*
*நிமிர்ந்து நட,*
*சுதந்திரமாக நட,*
*நிர்வாணமாக நட.*

*உன் தாய்மண்ணின் வேர்கள்*
*உன் மேனியைத் தழுவிக் கொஞ்சட்டும்.*
*வெற்றுமேனியின் மேல்தோல்*
*தன் நாட்டுச் சூரியனை உறிஞ்சிக்*
*கறுப்பாக மிளிரட்டும்.*

**– செகேயே காப்ரே மெதின்**

## Breath

Listen more to things
Then to words that are said.
The water's voice sings
And the flame cries
And the wind that brings
The woods to sighs
Is the breathing of the dead.

Those who are dead have never gone away.
They are in the shadows darkening around,
They are in the shadows fading into day,
The dead are not under the ground.
They are in the trees that quiver,
They in the woods that weep,
They are in the waters of the rivers,
They are in waters that sleep.
They are in the crowds, they are in the homestead.
The dead are never dead.

Listen more to things
Than to words that are said.
The water's voice sings
And the flame cries

# மூச்சு

*சொல்லப்படும் வார்த்தைகளைவிடப்*
*பொருட்களை அதிகம் செவியுறு.*
*நீரின் குரல் பாட்டிசைக்கிறது.*
*நெருப்பு ஓலமிடுகிறது*
*கானகத்தின் பெருமூச்சான காற்றே*
*இறந்தோரின் மூச்சு.*

*இறந்தோர் எப்போதும் சென்றிடவில்லை.*
*சூழ இருளும் நிழலில் அவர்கள் உளர்.*
*நூலாக வெளிவரும் நிழலில் அவர்கள் உளர்.*
*இறந்தோர் மண்ணுக்கு அடியில் இல்லை.*
*அவர்கள் அதிர்வுறும் மரங்களில் உளர்.*
*அவர்கள் ஏங்கிஅழும் கானகங்களில் உளர்.*
*அவர்கள் நதிகளின் நீரில் உளர்.*
*அவர்கள் உறங்கும் நீர்நிலைகளில் உளர்*
*அவர்கள் கூட்டத்தில், வீடுசூழ் பண்ணையில் உளர்.*
*இறந்தவர்கள் என்றுமே இறந்திலர்.*

*சொல்லப்படும் வார்த்தைகளை விடப்*
*பொருட்களை அதிகம் செவியுறு.*
*நீரின் குரல் பாட்டிசைக்கிறது.*
*நெருப்பு ஓலமிடுகிறது.*
*கனகத்தின் பெருமூச்சான காற்றே*
*இறந்தோரின் மூச்சு.*
*சென்றிட்டோரல்லலல்லாதவர்,*
*மண்ணுக்கடியில் இல்லாதோர்*
*இறக்கவே செய்யாதவர்.*

And the wind that brings
The woods to sighs
Is the breathing of the dead.
Who have not gone away
Who are not under the ground
Who are never dead.

Those who are dead have never gone away.
They are at the breast of the wife.
They are in the child's cry of dismay
And the firebrand bursting into life.
The dead are not under the ground.
They are in the fire that burns low
They are in the grass with tears to shed,
In the rock where whining winds blow
They are in the forest, they are in the homestead.
The dead are never dead.

Listen more to things
Than to words that are said.
The water's voice sings
And the flame cries
And the wind that brings
The woods to sighs
Is the breathing of the dead.

And repeats each day
The Covenant where it is said
That our fate is bound to the law,
And the fate of the dead who are not dead

இறந்துவிட்டார்கள் எப்பொழுதுமே சென்றிருக்கவில்லை.
அவர்கள் மனையாளின் மார்பில் உள்ளனர்.
குழந்தையின் திகில் அழுகுரலில் உள்ளனர்.
வெடித்து உயிர்க்கும் எரிகொள்ளியில் உள்ளனர்.
இறந்தோர் மண்ணுக்கு அடியில் இல்லை.
எரியும் இறுதியில் அவர்கள் உள்ளனர்.
புல்லில் சிந்துதற்கான கண்ணீருடன் இருக்கின்றனர்.
ஊளையிடும் காற்று சுழன்றடிக்கும் பாறையில் உள்ளனர்.
காட்டில், வீட்டில் அவர்கள் உள்ளனர்.
இறந்தோர் என்றும் இறந்திலர்

சொல்லப்படும் வார்த்தைகளைவிடப்
பொருட்களை அதிகம் செவியுறு.
நீரின் குரல் பாட்டிசைக்கிறது.
நெருப்பு ஓலமிடுகிறது.
கானகத்தின் பெருமூச்சான காற்றே
இறந்தோரின் மூச்சு.

தினந்தினம்
நம் விதி சட்டத்தின் பிணைக்கப்பட்டது
இறந்திலரா இறந்தோரின் விதி
அவர்களைவிட வலுவான
மூச்சின் ஆவிகளுடன் பிணைக்கப்பட்டது
என்றுரைக்கப்பட்டுள்ள திரு ஒப்பந்தம்
மீண்டும் மீண்டும் உரைக்கிறது
நாம் வாழ்க்கையுடன் இந்தக் கடும் விதியால்
பிணைக்கப் பட்டுள்ளோம்.

To the spirits of breath who are stronger than they
We are bound to Life by this harsh law
And by this Covenant we are bound
To the deeds of the breathings that die
Along the bed and the banks of the river,
To the deeds of the breaths that quiver
In the rock that whines and the grasses that cry
To the deeds of the breathings that lie
In the shadow that lightens and grows deep
In the tree that shudders, in the woods that weep,
In the waters that flow and the waters that sleep,
To the spirits of breath which are stronger than they
That have taken the breath of the deathless dead
Of the dead who have never gone away
Of the dead who are not now under the ground.

Listen more to thing
Than to words that are said
The water's voice sings
And the flame cries
And the wind that brings
The woods to sighs
Is the breathing of the dead.

*Birago Diop*

இந்த அருள் உடன்படிக்கையில் நாம்
நதியின் மடியிலும் கரைகளிலும்
இறக்கும் மூச்சுகளின் செயல்களுடன் கட்டுண்டுள்ளோம்.

இந்தக் கூட்டு ஒப்பந்தத்தால் நாம்
ஊளையிடும் பாறையில் நடுங்கும் மூச்சுகளின் செயல்களுடன்,
ஓசையிட்டு அழும் புற்கள்
ஒளிபெறும் நிழல்களில் கிடக்கும் மற்றும்'
நடுநடுங்கும் மரத்தினுள் வளரும்
மூச்சுகளின் செயல்பாடுகளுடன்
நாம் பிணைக்கப்பட்டுள்ளோம்

அழுகின்ற காடுகளில்
ஓடுகின்ற நீர்களில்
உறங்குகின்ற நீர்களில்
இறப்பற்ற இறந்தோரின் மூச்சை எடுத்துக் கொண்ட,
அவற்றைவிட பலம் பொருந்திய மூச்சு ஆவிகளுடன்
நாம் கட்டுண்டுள்ளோம்.
இங்கிருந்து செல்லாத இறந்தோர்,
இப்போது மண்ணுக்கு அடியில் இல்லாத இறந்தோரின்
செயல்களுடன் நாம் கட்டுண்டுள்ளோம்.

சொல்லப்படும் வார்த்தைகளைவிடப்
பொருட்களை அதிகம் செவியுறு.
நீரின் குரல் பாட்டிசைக்கிறது.
நெருப்பு ஓலமிடுகிறது.
கானகத்தின் பெருமூச்சான காற்றே
இறந்தோரின் மூச்சு

– பிராகோ டியோப்

## Night Rain

What time of night it is
I do not know
Except that like some fish
Doped out of the deep
I have bobbed up bellywise
From stream of sleep
And no cocks crow.
It is drumming hard here
And I suppose everywhere
Droning with insistent ardour upon
Our roof thatch and shed
And thro' sheaves slit open
To lightning and rafters
I cannot quite make out overhead
Great water drops are dribbling
Falling like orange or mango
Fruits showered forth in the wind
Or perhaps I should say so
Much like beads I could in prayer tell
Them on string as they break
In wooden bowls and earthenware
Mother is busy now deploying

# இரவு மழை

ஆழத்திலிருந்து துள்ளி எழும்பிய மீனைப் போலத்
தூக்க ஓடையினின்று நான்
வயிற்றுப்புறமாக வெட்டிப் புரண்டேன்.
மற்றும்
காகங்கள் ஏதும் கரையவில்லை என்பதன்றி
இரவின் எந்த நேரம்
என்று எனக்குத் தெரியவில்லை.

இங்கு கடுமையாக முரசடிக்கிறது
எங்கணும் இப்படித்தான் என்று எண்ணுகிறேன்.
எங்கள் கூரை மற்றும் கொட்டில் மீது
அழுத்தமான முனைப்புடன் இரைச்சல்.
தலைமேல் என்ன நடக்கிறதென்று புரிந்து கொள்ள இயலவில்லை.
மின்னலுக்கு ஓட்டுக் குழிவுகள் பிளந்து திறந்து
கைமரம் வழியே பெரும்பெரும் நீர்த்துளிகள் ஒழுகக்
காற்றும்
பொழியப் பெறும் ஆரஞ்சு மாங்காய்போல,
அல்லது
வணங்குதலில் பயனுறும் மணிகள்போல
என்று நான் சொல்ல வேண்டுமோ,
மரப்பாத்திராங்களிலும் மட்பாண்டங்களிலும்
அவை உடைந்திட
அம்மா எங்கள் அறைப்பகுப்பின் தரையை
ஒழுங்கு செய்வதில் மும்முரமாயிருக்கிறார்.

கானகத்திலிருந்து வரிசையாக வெளியேறும் எறும்புகள்போல்
தளத்தில் சிதறி இடம்பிடிக்கும் நீரோட்டத்தினின்று
அவள்தன் குப்பைத் தொட்டிகள், பைகள், கொப்பரைகள்
ஆகியவற்றை அகற்றும் போதான
அவளின் காலடிகளை நாம் அறிவேன்.

எனவே நடுங்காதீர்கள் தம்பிகளே,
திரும்புங்கள், தளர்ந்திழுக்கும் பாய்களின்மீது
மற்றோர் படுத்துள்ள பக்கமாகத்
திரும்பிப் படுங்கள்.

About our roomlet and floor.
Although it is so dark
I know her practiced step as
She moves her bins, bags and vats
Out of the run of water
That like ants filing out of the wood
Will scatter and gain possession
Of the floor. Do not tremble then
But turn, brothers, turn upon your side
Of the loosening mats
To where the others lie.
We have drunk tonight of a spell
Deeper than the owl's or bat's
That we of wings may not fly.
Bedraggled up on the *iroko,* they stand
Emptied of hearts, and
Therefore will not stir, no, not
Even at dawn for then
They must scurry in to hide.
So let us roll over on our back
And again roll to the beat
Of drumming all over the land
And under its ample soothing hand
Joined to that of the sea
We will settle to sleep of the innocent and free

John Pepper Clark

இன்றிரவு நாம்
நம் சிறகு கொண்டு பறந்திடா வகையில்
ஆந்தை, வவ்வாலையும் விடக்
காட்டமானாவொரு
வசியபானம் அருந்தியுள்ளோம்.

அவை இராகோ மீது தொங்கிக் கொண்டு
காலியான இதயங்களுடன் திகழ்கின்றன.
எனவே, அவை அசைய மாட்டா.
விடியலின்போடுகூட அசையா,
ஏனெனில்
அப்போது அவை ஒளிந்துகொள்ள விரைய வேண்டும்.
எனவே நாம் மல்லாக்கப் படுப்போம்,
பூமியெங்கும் ஒலிக்கும் மத்தள ஒலிக்கேற்ப உருள்வோம்.

கடலோடு கைகோர்த்த
அதன்
ஆதுரக் கரங்களினுள்
மாசற்ற சுதந்திர மனிதர்களின் துயில் ஆள்வோம்.

**ஜான் பெப்பர் கிளார்க்**

## Africa

Africa my Africa
Africa of proud warriors in ancestral savannahs
Africa of whom my grandmother sings
On the banks of the distant river
I have never known you
But your blood flows in my veins
Your beautiful black blood that irrigates the fields
The blood of your sweat
The sweat of your work
The work of your slavery
The slavery of your children
Africa tell me Africa
Is this you this back that is bent
This back that breaks under the weight of humiliation
This back trembling with red scars
And saying yes to the whip under the midday sun
But a grave voice answers me
Impetuous son that tree young and strong
That tree there
Is splendid loneliness amidst white and faded flowers
That is Africa your Africa
That grows again patiently obstinately
And its fruit gradually acquire
The bitter taste of liberty.

*-David Diop*

# ஆப்பிரிக்கா

*ஆப்பிரிக்கா*
*என் ஆப்பிரிக்கா.*
*முற்கால சவானாக்களின் பெருமைமிகு வீரர்களின் ஆப்பிரிக்கா.*
*தூரத்து ஆற்றின் கரைகளில்*
*என் பாட்டியால் பாடப்படும் ஆப்பிரிக்கா*
*நான் எப்போதும் உன்னை அறிந்திருக்கவில்லை.*
*ஆனால் உன் குருதி என் நாளங்களில் ஓடுகிறது.*
*வயல்களுக்குப் பாசனமாகும் உன் அழகிய கறுப்பு இரத்தம்*
*உன் வியர்வையின் இரத்தம்*
*உன் உழைப்பின் வியர்வை*
*உன் அடிமைத் தனத்தின் வேலை*
*உன் குழந்தைகளின் அடிமைத்தனம்,*
*ஆப்பிரிக்காவே, என் ஆப்பிரிக்காவே*
*சொல்,*
*இதுதான் நீயா? உன் முகுது வளைந்து?*
*சிறுமைப்படுத்தலின் சுமையால் உடைந்த முதுகு*
*சிவப்புத் தழும்புகளால் நடுங்கிக் கொண்டு*
*நடுநாட் சூரியனின் கீழே*
*சவுக்குக்கு ஆமாம் போடும் முதுகு?*
*ஆனால் ஒரு ஆர்ந்தமைந்த குரல் எனக்கு பதிலிறுக்கிறது.*
*கட்டுக்கடங்காதது மகனே,*
*அந்த இள வலிய மரம்*
*அதோ அங்கேயுள்ள மரம்*
*வெள்ளை மற்றும் வெளிறிய மலர்களின் நடுவே*
*நிறைநலமார்ந்த தனிமை.*
*அது ஆப்பிரிக்கா, உன் ஆப்பிரிக்கா,*
*பொறுமையாகப் பிடிவாதமாக வளர்கின்ற,*
*அதன் கனி படிப்படியாகச்*
*சுதந்திரத்தின் கசப்புச் சுவையைத்*
*தற்கொள்ளும்*
*உன் ஆப்பிரிக்கா.*

*டேவிட் டியோப்*

## The Solitary Woodsman

When the grey lake-water rushes
Past the dripping alder-bushes,
        And the bodeful autumn wind
In the fir-tree weeps and hushes,–

When the air is sharply damp
Round the solitary camp,
        And the moose-bush in the thicket
Glimmers like a scarlet lamp,–

When the birches twinkle yellow,
And the cornel bunches mellow,
        And the owl across the twilight
Trumpets to his downy fellow,–

When the nut-fed chipmunks romp
Through the maples' crimson pomp,
        And the slim viburnum flushes
In the darkness of the swamp,–

When the blueberries are dead,
When the rowan clusters red,
        And the shy bear, summer-sleekened,
In the bracken makes his bed,–

# ஒரு ஒற்றை விறகு வெட்டி

நீர் சொட்டும் ஆல்டர் புதர்களைத் தாண்டிச்
சாம்பலநிற ஏரித் தண்ணீர் பாய்கையில்
தீமைக்குறி இலையுதிர் காலக் காற்று
ஃபிர் மரங்களில் அழவும் அமிழ்ந்து இரைதலும்போது

தனித்த முகாமைச் சுற்றிக்
காற்று கூர் குளிராக இருக்கையில்,
காடுகளில் உள்ள கடமான் புதர்
செல்விளக்குபோல் மினுங்கையில்

பிர்ச்சுகள் மஞ்சளாய்ச் சிமிட்டுகையில்
கார்னல் கொத்துக்கள் முதிர்கையில்,
மருள்மாலப் பொழுதின் குறுக்கே ஆந்தை
தன் மென்தூவி இணைக்கு எக்காள அழைப்பிடுகையில்

மேப்பிளின் சிவப்புப் பகட்டின் வழியே
பருப்பு உண்ணும் அணில்கள் ஓடியாடுகையில்
சதுப்பு நில இருளில் வைபர்னம் கீற்றுகள் விரிந்து வெளி வருகையில்

நீலபெரிகள் இறந்த பிறகு,
ரோவான் கொத்துக்கள் சிவப்பான பிறகு
புறங்காணத் தயங்கும் கரடி
கோடைப் பட்டிழைவுக் காட்டுப் புதரைத்
தன் படுக்கை ஆக்குகையில்

On a day there comes once more
To the latched and lonely door,
        Down the wood-road striding silent,
One who has been here before.

Green spruce branches for his head,
Here he makes his simple bed,
        Couching with the sun, and rising
When the dawn is frosty red.

All day long he wanders wide
With the grey moss for his guide,
        And his lonely axe-stoke starles
The expectant forest-side.

Toward the quite close of day
Back to camp he takes his way,
        And about his sober footsteps
Unafraid the squirrels play.

On his roof the red leaf falls,
At his door the bluejay calls,
        And the hears the wood-mice hurry
Up and down his rough long walls;

Hears the laughter of the loon
Thrill the dying afternoon;
        Hears the calling of the moose
Echo to the early moon.

ஒருநாள்
அமைதியான அடியிட்டுத்
தாளிட்ட தனித்த இத்தகவுக்குக்
காட்டுச் சாலை வழியே
முன்னர் இங்கு வந்திருந்தவன்
மீண்டுமொருமுறை வருகிறான்

தலைக்குப் பச்சை ஊசியிலைக் கிளை வைத்துத்
தன் எளிய படுக்கையை இங்கே இடுகிறான்.
சூரியனுடன் படுப்பதும்
விடியல் உறைபனி சிவப்பாக இருக்கையில்
எழுதுவமாக

சாம்பல் புதை சேற்றுநிலம் வழிகாட்ட
நாள் முழுதும் அவன் அலைந்து திரிகிறான்.
காத்திருக்கும் கானகத்தை
அவன் தனித்த கோடரி வீச்சு திடுக்கிடச் செய்கிறது.

நாள் முடியும் அமைதிப் போதில்
தன் முகாம் மீள்கிறான்.
அவன் மட்டான காலடி ஓசைக்கு
பயமின்றி விளையாடும் அணில்கள்.

அவன் கூரையில் சிவப்பு இலைகள் வீழ்கின்றன
அவன் வாசலில் நீல.ஜே கூவுகிறது.
தன் சொரசொரத்த சுவர்களின் மேலும் கீழும்
காட்டெலிகள் ஓடுதலைக் கேட்கிறான்.

முடிந்து கொண்டிருக்கும் மதியத்தை விதிர்விதிர்க்கச் செய்யும்
லூனின் சிரிப்பைச் செவியுறுகிறான்.
கடமான் அழைப்பு நிலவில் எதிரொலித்தல் கேட்கிறான்

And he hears the partridge drumming,
The belated hornet humming,–
        All the faint, prophetic sounds
That foretell the winter's coming.

And the wind about his eaves
Through the chilly night-wet grieves,
        And the earth's dump patience fills him,
Fellow to the falling leaves.

*Sir Charles G.D.Roberts*

*பேட்ரிட்ஜ் கொட்டித்தலையும்*
*காலங்கடந்த மலைக்குளவி சிறகடிப்புப் பொம் ஒலியும்*
*குளிர்கால வரவை முன்னுரைக்கும்*
*மெலிந்த முன்னறிவிப்பு ஒலிகளை கேட்கிறான்*

*குளிர்ந்த இரவின் ஈரம் வழியக்*
*காற்று அவன் இறவாரத்தில் துயருகுகிறது*
*உதிரும் இலைகளின் அவ்வினத்தானை*
*பூமியின் ஊமைப் பொறுமை நிரப்புகிறது*

**சர். சார்லஸ் ஜி.டி. இராபர்ட்ஸ்**

## Egg-and-Dart

This never-ended searching for the eyes
Wherein the unasked question's answer lies;
This beating, beating, beating of the heart
Because a contour seems to fit the part;
The long, drear moment of the look that spoils
The little bud of hope; the word that soils
The pact immaculate, so newly born;
The noisy silence of the old self-scorn;
These, and the sudden leaving in the lurch;
Then the droll recommencement of the search.

*Robert Finch*

# முட்டையும் சிறு ஆற்று மீனும்

கேட்காத கேள்விகளுக்கான பதில்கள் எங்குள்ளனவோ
அந்தக் கண்களுக்கான
இந்த முடிவற்ற தேடல்;
ஒரு பரும்படு மாதிரியே பதிலியாய் அமையக்கூடுதலால்
துடித்துத் துடித்துத் துடிக்கும் இதயம்
நம்பிக்கையெனும் சிறுமொட்டை அழிக்கும்
பார்வையும் நீள் சஞ்சல நிமிடம்;
மாசற்றவோர் ஒப்பந்தத்தைக் களங்கப்படுத்தும்
ஒரு வார்த்தை;
பழம்பட்ட சுயஇகழ்ச்சியின் இரையும் அமைதி;
இவை,
மற்றும்
மோசத்திலகப்பட்ட நிலையில்
திடீரெனக் கைவிடப் படல்;
பின்
அத்தேடலின் கோமாளித்தனமான
மறு ஆரம்பம்

– இராபர்ட் ஃபின்ச்

## Peacock and Nightingale

Look at the eyes look from my tail!
What other eyes could look so well?
A peacock asks a nightingale.

And how my feathers twist the sun!
Confess that no one, no, no one
Has ever seen such colour spun.

Who would not fall in ecstasy
Before the gemmed enamelry
Of ruby-topaz-sapphire me?

When my proud tail parades its fan,
You, little bird, are merely an
Anachronism in its vain.

Let me advise that you be wise,
Avoid the vision of my eyes.
And then the nightingale replies.

*Robert Finch*

# மயிலும் இராப்பாடிக் குருவியும்

எனது வாலிலிருந்து பார்க்கும் கண்களைப் பார்!
வேறு எந்த விழிகள் இவ்வளவு அழகாகக் காண இயலும்?
ஒரு மயில் ஒரு இராப்பாடிக் குருவியைக் கேட்கிறது.
மேலும் எனது இறகுகள் எப்படிக்
கதிரவனைச் சுழற்றுகின்றன!
உள்ளதை ஒத்துக்கொள்
எவருமே, இல்லை, எவருமே
இத்தகு வண்ணப் பின்னலைக்
கண்டதில்லை என்று.
மாணிக்கம், புட்பராகம், நீலம், என்னின்
இரத்தினமிழைத்த பளிங்குத்தனம் முன்
யார்தான் மிகுகளிப்பில் விழமாட்டார்?
எனது இறுமாந்த வால் பவனி வரும்போது
நீ வெறும் காலத்தின் அனர்த்தமான பிசகு,
ஏ! சிறு பறவையே.
"புத்தியோது நடந்து கொள்
என் விழிகளின் பார்வையில் இருந்து ஒதுங்கு"
பதிலிறுத்தது இராப்பாடிக் குருவி.

– இராபர்ட் ஃபின்ச்

## On looking into Henry Moore

### I

Sun, stun me, sustain me
Turn me to stone:
Stone, goad me and gall me
Urge me to run.

When I have found
Passivity in fire
And fire in stone
Female and male
I'll rise alone
Self-extending and self-known.

### II

The message of the tree is this:
Aloneness is the only bliss

Self-adoration is not in it
(Narcissus tried, but could not win it)

Rather, to extend the root
Tombwards, be at home with death

# ஹென்றி மூரை ஆராயும்போது

## I

சூரியனே, என்னை உணர்வுறச் செய்,
ஆதரித்துத் தாங்கு.
என்னைக் கல்லாக மாற்றிடு.
கல்லே,
என்னைத் தூற்றுக் கோலாய்த் தூண்டு
கசப்பால் நிறை,
ஓடத் தூண்டு.

நான் நெருப்பில் மந்தம் கண்டுவிட்ட பிறகு
கல்லில் நெருப்பைக் கண்டிட்ட பிறகு
பெண் ஆண் கண்டிட்ட பிறகு
தனியே எழுவேன்
சுயம் வரித்தவாறு,
சுயம் அறிந்திருந்து

## II

மரம் தரும் செய்தி இதுதான்:
தனித்திருத்தலே கழிபேருவகை
அதில் சுயவந்தனை இல்லை.
(நார்சிசு முயன்றான்
ஆனால் அதில் வெற்றிபெறவில்லை)
பதிலாக,
வேர்களைக் கல்லறை நோக்கி நீட்டுதல்,
சாவுடன் இயல்பாக இருத்தல்,

But in the upper branches know
A green eternity of fire and snow

### III

The fire in the farthest hills
Is where I'd burn myself to bone:
Clad in the armour of the sun
I'd stand anew, alone.

Take off this flesh, this hasty dress
Prepare my half-self for myself:
One unit, as a tree or stone
Woman in man, and man in womb.

*Dorothy Livesay*

ஆயின்,
மேற்கிளைகளில்
நெருப்பின்
பனியின்
பசும் நிலை பேருடைமை அறிந்திருத்தல்

## III

தூரத்துக் குன்றுகளின் நெருப்பு இருக்கிறதே
அங்குதான் என்னை எலும்பாக எரிப்பேன்:
சூரியனின் மேல்த்தோட்டில் ஆடை கொண்டு
புதிதாகத் தனியாக நிற்பேன்
இந்தத் தசையை,
அவசர கதி ஆடையைக் களைத்துவிட்டு
எனது அரைச்சுயத்தை எனது
சுயத்துக்காகத்
தயார் செய்வேன்.

ஒரே ஏகம்
ஒரு மரம் அல்லது கல்
ஆணில் பெண், கருவறையில் ஆண்.

– டாரதி லிவ்சே

## So Long, Charlie Parker

The night before he died
the bird walked on and played

his heart out: notes fell
like figure-forming pebbles
in a pond. he
was angry: and we

knew he wept to know his time had come
so soon. so little had been done

so little time to do it in

he wished to hold the night from burning
all time long. but time

is short
and life
is short
and breath
is short

# விடைபெறுகிறேன் சார்லி பார்க்கர்

தான் இறந்ததற்கு முந்தைய நாள்
பறவை நடந்து,
தன் இதயம் கொள்ளுமட்டும் விளையாடியது.

இசைச் சுரங்கள்
குளத்தில் உருவங்களை உருவாக்குமுகமாக விழும்
கூழாங்கற்களைப் போல விழுந்தன.
அவன் ஆத்திரத்தில் இருந்தான்.

தன் நேரம் இவ்வளவு விரைவில் வந்ததறிந்து
அவன் அழுததை நாங்கள் அறிந்திருந்தோம்.
மிகச் சிறிதளவே செய்யப்பட்டிருந்தது.
அதைச் செய்வதற்கும் வெகு குறைவான காலமே தரப்பட்டிருந்தது.

இரவை முழுதும் எரியாமல் பிடித்து வைத்திட அவன் விழைந்தான்.
ஆனால் காலம் குறைவானது.
வாழ்க்கையும் குறைவானது.
எனவே அவன்
வேகங் குறைத்துத்
தெளிவு இன்றி
நிறுத்தினான்.

and so he
slowed and
slurred and
stopped. his
fingers fixed
upon a minor key:
then slipped

his bright eyes blazed and bulged against the death in him then
knocking at the door

he watched:
as one will watch a great clock striking time from a great
  booming midnight bell:
the silence slowly throbbing in behind the dying bell

the night before he died
the bird walked on through fear through faith through frenzy
  that he tried
to hide but could not stop that bell

*Edward Brathwaite*

*அவன் விரல்கள்*
*ஒரு சிறு சாவியைப் பொருந்தின;*
*பின் நழுவின.*
*கதவைத் தட்டிக் கொண்டு*
*அவனில் இருந்த சாவுக்கு எதிராக*
*அவன் ஒளிமிகு கண்கள்*
*அழல் வீசிப் புடைத்தன.*
*அவன் கணித்தான்*

*ஒரு பெருத்து எதிரொலிக்கும் நள்ளிரவு மணியினின்று*
*ஒரு பெரும் கடிகாரம் நேரத்தை அளந்தடிப்பதைக்*
*கண்ணுறுபவன் போல.*
*இறந்து கொண்டிருக்கும்*
*மணியோசையின் பின்*
*மெதுவாக அதிரும் அமைதியை*

*தன் இறப்பிற்கு முந்தைய நாள்*
*அப்பறவை தான் மறைக்க முயன்ற*
*அச்சம், நம்பிக்கை, மிகுசினம்,*
*ஆகியன வழியே நடந்தான்.*
*ஆயின்*
*அந்த மணியை நிறுத்த இயலவில்லை.*

**எட்வர்டு பிரத்வெய்ட்**

## A Far Cry from Africa

A wind is ruffling the tawny pelt
Of Africa. Kikuyu, quick as flies
Batten upon the bloodstreams of the veldt.
Corpses are scattered through a paradise.
But still the worm, colonel of carrion, cries:
'Waste no compassion on these separate dead'
Statistics justify and scholars seize
The salients of colonial policy.
What is that to the while child hacked in bed?
To savages, expendable as Jews?

Threshed out by beaters, the long rushes break
In a white dust of ibises whose cries
Have wheeled since civilization's dawn
From the parched river or beast-teeming plain;
The violence of beast on beast is read
As natural law, but upright man
Seeks his divinity with inflicting pain.

Delirious as these worried beasts, his wars
Dance to the tightened carcass of a drum,
While he calls courage still, that native dread
Of the white peace contracted by the dead.

# ஆப்பிரிக்காவில் இருந்து ஒரு தொலைதூர கூவல்

ஒரு காற்று
ஆப்பிரிக்காவின் பழுப்பு மேனியைத்
தழுவுகிறது
விவாதம்
ஈக்களைப் போல வேகமாக
மரங்களிடையிட்ட புல்வெளிப் பரப்பான அதன்
ரத்த நாளங்களில்
அடிக்கிறது.
ஒரு சொர்க்கம் எங்கனும் பிணங்கள் கிடக்கின்றன
ஊழ்த்த இறைச்சியின் படைத்தலவனான புழு
ஆணையிடுகிறது:
"தனித்த இறந்த இவற்றின் மீது
எந்தக் கருணையும் காட்டாதீர்கள்!"
நாடுபிடிக் கொள்கையின் முக்கியங்களைப்
புள்ளியியல் நியாயப் படுத்துகிறது, படிப்பாளிகள் கைகவர்கின்றனர்
அது என்ன ஒரு பொருட்டு
படுக்கையிலேயே சிதிலமாக்கப்பட்ட வெள்ளைக் குழந்தைக்கு?
குறிக்கோளுக்காக இழந்துவிடத்தக்க
யூதர்களைப் போன்ற நாகரீகம் பெறாத மக்களுக்கு?
நாற்றடிப்போரால் துலைக்கப்பெற்ற நாணற் றண்டுகள்
காய்ந்த நதி அல்லது விலங்குநிறை வெளிகளினின்று
நாகரீகம் தொடங்கிய காலந்தொட்டுக் கீச்சொலி சுழன்று கொண்டிருக்கும்
இபிசுகளைப் போல்
வெண் துவியாய் வெடிக்கின்றன.

மிருகம் மிருகத்திற்கு இழைக்கும் வன்முறை
இயற்கையின் நியதியென ஆகிறது.
ஆயின்
நேர் நிற்கும் மனிதன்

Again brutish necessity wipes its hands
Upon the napkin of dirty cause, again
A waste of our compassion, as with Spain.
The gorilla wrestles with the superman.

I who am poisoned with the blood of both,
Where shall I turn, divided to the vein?
I who have cursed
The drunken officer of British rule, how choose
Between this Africa and the English tongue I love?
Betray them both, or give back what they give?
How can I face such slaughter and be cool?
How can I turn from Africa and live?

*Derek Walcott*

*வலியைக் கொடுப்பதன் மூலம்*
*தன் இறைமையைத் தேடுகிறான்.*
*சலனப்பட்ட இந்த விலங்குகள் போல்*
*அறிவு திறம்பிய மனிதன்*
*வீரத்தை,*
*இறந்துவிட்டவர்களால் ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்ட*
*வெள்ளை அமைதியின் ஆதி அச்சம் என*
*இன்னும் கூறிக் கொண்டிருக்க*
*இழுத்துக் கட்டப்பட்ட தோல் முரசுகளின் தாளத்திற்குத்*
*தன் போர்கள் ஆட இருக்கிறான்.*
*தவிர*
*மிருகத்தனமான அத்தியாவசியம் தன் கரங்களை*
*ஒரு தீய காரணமெனும் கைக் குட்டையில்*
*துடைத்துக் கொள்கிறது*
*மீண்டும் நம் கருணையின் வீரன்,*
*ஸ்பெயின் நாட்டில்*
*கொரில்லா தகுநிறை மனிதனுடன் மல்யுத்தமிடுதல்போல்.*
*இந்த இரண்டின் குருதியால் விடமாக்கப்பட்ட*
*நான்,*
*இரத்த நாளங்கள் ரை பகுக்கப்பட்ட நான்*
*எதை நோக்கித் திரும்புவது?*
*பிரிட்டிஷ் ஆட்சியின் குடிமுகிழ்த்த அதிகாரியைத் திட்டிய நான்*
*எவ்வாறு*
*இந்த ஆப்பிரிக்காவுக்கும்*
*நான் காதலிக்கும் ஆங்கிலத்திற்கும் இடையே*
*ஒன்றைத் தேர்ந்தெடுப்பது?*
*இரண்டையும் துரோகிக்கவா?*
*அல்லது*
*அவை தருவனவற்றைத் திருப்பித் தரவா?*
*எவ்வாறு நான் இத்தகு கொலைத் தொழிலைக் கண்டு கொண்டு*
*கவனிக்காது இருக்க இயலும்?*
*நான் எவ்வாறு*
*ஆப்பிரிக்காவுக்கு முகம் மறைத்து வாழ இயலும்?*

**டெரக் வால்க்காட்**

## Words for Father

now you are ill,
the body has broken down
after the hot decades of labour.
now is sudden time
to rest with restless muscles,
to close the eyes of responsibility.

fate is not kind,
generosity made you no rich man,
now too much kindness a healer for heartbreaks.
after the years, the hot sun
over the dry whitening head,
the evening that drained life out of you,
the debts of duty,
you are home, on a hard bed
out of sleep, when you need sleep most.

the sons and the daughters
are young, you have married late
and we are young to an old father
me, i have pulled out my wet roots
to follow a dry road

# தந்தைக்கு சில வார்த்தைகள்

இப்போது உனக்கு நலமில்லை
செயலாற்றல்மிகு வருடங்களின் உழைப்பின் பின்
உடல் உடைந்துவிட்டது.
ஒய்வற்ற தசைகளுடன் ஓய்வெடுக்கவும்
பொறுப்புகளின் கண்களை மூடவும்
திடீரென நேரம் வந்துவிட்டது.
விதிக்குக் கருணை இல்லை.
உன் தாராளம் உன்னைச் செல்வந்தனாக்கவில்லை.
அபரிமிதக் கருணை
உன் இதய வேதனைகளுக்கு
மருந்தாகவில்லை.
காய்ந்து நரைத்துக் கொண்டுள்ள தலைமீது சுடுசூரியனுடன்
ஆண்டுகள் சென்றபின்,
வாழ்க்கையை வழிந்தோடச் செய்த
மாலைகளுக்குப் பின்
கடமை எனும் கடன்களுக்குப் பின்
நீ வீடு திரும்பி,
தூக்கம் அவசியம் தேவைப்படும் காலத்து
கடின வொரு படுக்கையின்மீது
தூக்கமின்றி இருக்கிறாய்.
நீ தாமதித்து மணந்ததினால்
உன் மகன்களும் மகள்களும்
சிறியவர்களா யுள்ளனர்.
ஒரு வயதான தந்தையின்
சிறு குழந்தைகள் நாங்கள்.

the way home is a long lane
lost in the undergrowth.
home was not the kind of love i seek,
not knowing its doors or windows,
being left only with a fragmented past,
which unwise affairs broke
through the brittle centre.
i was too broken to care
though i know that not to care
was the sin of the rootless runner.

your eldest daughter married,
she does not understand
the web of male worries.
the other children are too young to know your circular chase of disappointment.

now you are ill,
the good God return you the breath of your youth
for you have been born to be young,
to stand and fight through the days
and the rude elements.
sickness that lay you down
is your traitor in the blood.
but father, it is time to rest now
to close your eyes on the world,

ஒரு காய்ந்த சாலையைத் தொடர
எனது ஈரவேர்களை நான்
பிடுங்கி விட்டேன்.
வீடு செல்லும் நீண்ட பாதை
புதர்களில் காணாமல் போய்விட்டது.
வீடு
நான் தேடும் அன்பைக்
கொண்டதாக இருக்கவில்லை.
அதன் கதவுகளையும் சன்னல்களையும் அறிந்திராமல்
ஞானமற்ற உறவுகளால்
நட்ட நடுவில் உடைக்கப் பட்ட
பழமையின் ஒரு பகுதி மட்டுமே
என்னிடம் எஞ்சியிருந்தது.
பொறுப்பற்றமை, வேர்களற்று ஓடுபவனின் பாலம்
என்பதறிந்தும்
பொறுப்பேற்க இயலாது உடைந்திருந்தேன்.
உன் மூத்தமகள் மணம் கொண்டாள்.
ஆணில் கவலைகளெனும் வலை
அவளுக்குப் புரிவதில்லை
மற்ற குழந்தைகள்,
ஏமாற்றத்தை நீ எப்படிச் சுற்றி விரட்டிச் சென்றாய்
என்பதை
அறிய இயலா அளவு
சிறியவர்கள்.
இப்போது நீ நலமின்றி இருக்கிறாய்
கருணை நிறைந்த கடவுள்
உன் இளமையின் சுவாசத்தை
உனக்கு மீண்டும் தரட்டும்.
ஏனெனில் நீ
இளமையுடன் இருக்கவும்
வலிய இயற்கை ஆற்றல்களையும்

to feel the luxury of the holidays
that you never took
that have collected into one sickness.

now that you are ill,
leave the worries to the young,
the world is too difficult now,
too fast against the slow blood
of an old man
close your red eyes now
and go to sleep.
this illness will go with the heat.
when you wake up
we shall be around
to see the youth in your eyes
and body and voice.

*Shirley Lim*

காலங்களையும் எதிர்த்து நின்று
போரிடவும் பிறந்தவன்.
உன்னைப் படுக்க வைத்த சுகவீனம்
உன் உதிரத்தில் உள்ள துரோகி.
ஆனால் தந்தையே,
இந்த உலகைக் கண்களினின்றி விலக்கி,
நீ இதுவரை துய்க்காததால்,
ஒரு சுகவீனமாக உருவாகிய
விடுமுறைகளின்
உயர் இன்பத்தை உணர்ந்து
ஒய்வெடுக்க வேண்டிய நேரம் இது.
இப்போது நீ நலம் குன்றியதால்
தொல்லைகளை இளையவர்களிடம் விட்டுவிடு
இப்போது உலகம்
மிகக் கடினமானதாக,
ஒரு வயோதிகனின்
மிதமான இரத்தத்தால்
சமாளிக்க இயலாத
வேகம் கொண்டதாக உள்ளது.
உன் சிறந்த விழிகளை மூடித் துயில்கொள்
சூடு விலகும்போது இந்த நோயும் விலகிவிடும்.
நீ எழும்போது
உனது கண்களிலும்
உடலிலும்
குரலிலும் உள்ள
இளமையைக் காண
உன்னைச் சுற்றி
நாங்கள் இருப்போம்.

–சேர்லி லிம்

# On Writing a Poem

To be simple is not a simple thing,
Not simply a matter of letting words
Speak for themselves, being grown-up,
Who will not easily take to being

Ordered about, or chaperoned,
Dressed up like dolls
And smart soldier boys
For a debut at a regimental ball.

How to control these diverse selves
Who will not willingly conform
For all the coaxing and the threats
To have nothing more to do with them all,

To gather the sparks of energy,
Marshall them to the heat of a tempo,
How to restrain the Master Self himself
Who will insist on projecting his own Ego

Is more than a trick on a tightrope,
Finding a parallelogram's
Resultant, or setting one faction
Against another—a matter of practice.

To be simple is to be involved
In a whole chaos, the claims and counterclaims
Of mind, heart, word, a universe
On fire-and the final sacrifice.

*EE Tiang Hong*

# கவிதை இயற்றல் குறித்து

எளிமையாய் இருத்தல் எளிதல்ல.
ஏதோ வார்த்தைகளைத்
தாமே பேசிக்கொள்ள அனுமதித்தல் அல்ல.
அலை வளர்ச்சி அடைந்தலை.

எளிதாக ஆணையிடப் படுவதையோ
காவலிடப் படுவதையோ
பொம்மைகள் போலோ
ஒரு படைஅணிவகுப்பு உடைக்குழு நடனத்திற்கு முதல் அனுபவமாக
மிடுக்கான போர்வீரர் சிறுவர்களாக அலங்கரிக்கப்படுதலையோ
எளிதில் ஏற்றுக் கொள்ள மாட்டா.

அனைத்து நயப்பேச்சு மற்றும் மிரட்டல்களுக்கு
விரும்பி இணங்காதும்
அவற்றுடன் எதுவும் வைத்துக்கொள்ளாமலும் இருக்கும்
இந்தப் பல்வேறுபட்ட தனித்துவங்களை
எவ்வாறு கட்டுப்படுத்துவது?

சக்தியின் பொறிகளை ஒன்றுகூட்ட
ஒரு உச்சத்தின் சூட்டுக்கு அவற்றைக் இணைவுறுத்தத்
தன் தான் எனும் தன் முனைப்ப முன்னிறுத்த வலியுறுத்தும்
தலைமைத் தன்னையே அவ்வாறு கட்டுப்படுத்தல்
கயிற்றின்மீது சாகசம் செய்வதைவிடக் கடினமானது.
ஒரு இணைலகத்தின் விளைவாக்கம் கண்டறியல்
அல்லது
ஒரு பக்கத்தை அதற்கெதிராகத் தூண்டிவிடல் அனுபவம் சார்ந்தது

எளிமையாயிருத்தல் என்பது
ஒரு முழுக் குழப்பத்தில் ஈடுபட்டிருப்பது.
நெருப்பு மற்றும் இறுதித் தியாகம் குறித்த
மனம், இதயம், சொல்,
ஒரு அண்ட சராசரம்
ஆகியவற்றின்
கோரிக்கைகள் மற்றும் எதிர் வழக்கீடுகள்.

இ.இ. டியாங் ஆங்

# Words

Words are dangerous, especially
The simple kind you leave behind for others,
For undesirable relatives and assorted purposes.
They are understood simply, edited,
Taken with a kind of air, a careful disregard:
Their plainness complicates.

When you say 'Tell him please,
That the anger has come to pass
That friendship is not maimed... or
Please do come but after the
Fever has been put aside...'
When you mean to be polite,
Careful, explicit, considerate, circumspect,
Adopting the proper tone,
You are likely to be quoted as saying
'He won't...'

# சொற்கள்

*சொற்கள் ஆபத்தானவை, குறிப்பாக,*
*மற்றவர்களுக்கு*
*விரும்பத்தகாத சொந்தங்கள் மற்றும் பல்தரப்பட்ட காரணங்களுக்கு*
*நாம் சொல்லும் சாதாரண வகையன.*

*அவை வெறுமனே புரிந்து கொள்ளப்படுகின்றன.*
*திருத்தப்படுகின்றன.*
*ஒரு பாவனையுடன் ஏற்கப்படுகின்றன.*
*கருத்தோடு தள்ளப்படுகின்றன.*
*அவற்றின் ஒளிவுமறைவற்றமை குழப்புகிறது.*

*"தயைசெய்து அவனிடம் கூறு*
*கோபம் போய்விட்டது*
*நட்பு ஊனப்படுத்தப்படவில்லை"*
*அல்லது*
*"அவசியம் வா, காய்ச்சல் நன்கு விட்ட பிறகு.."*
*என்று கூறும்பொழுது*
*நீ*
*பண்பட்ட முறையில்*
*கவனமாக, வெளிப்படையாக, ஆதுரத்துடன்,*
*சுற்றி வளைத்து,*
*சரியான தொணியைத் தேர்ந்தெடுத்துப் பேச,*
*நீ,*
*"அவர் மாட்டார்" என்று கூறுவதாக மேற்கோளிடப்படக் கூடும்.*

Words are neither valid, merciful nor bad,
In themselves, nothing unless used, urged,
Imported into dialogue,
Becoming part-anger, part-laughter, bruised,
Adding to the mood and gesture.
Words are words. Except for us
They are not personalities.

*Edwin Thumboo*

*வார்த்தைகள் தம்மளவில்,*
*உபயோகித்தல்,*
*வற்புறுத்தல்,*
*உரையாடலாகப் பொருட்சுட்டல்,*
*பாதி ஆத்திரம், பாதி சிரிப்பு, காயப்படல்,*
*மனோ நிலைக்கும் சைகைக்கும்*
*பலம் சேர்க்காமல் இருக்கையில்*

*செல்லுபடி யுடையனலோ,*
*கருணையுடையனலோ,*
*கெட்டவையோ*
*அல்ல.*

*சொற்கள் வெறும் சொற்கள்*
*நம்மையன்றி*
*அவை*
*தனித்துவம் கொண்டவையல்ல.*

**எட்வின் தம்பூ.**

# To a Visitor to Singapore

You come to my country loaded with your riches
We offer you a convenient stop
allow you to tempt us, lure our pretty girls
corrupt our innocence
because we need your money to survive.

back home you describe our clean and efficient city
but our politics you despise
say our way of life is stifling, oppressive
yet again and again you return
thriving on our survival's need

I often wonder what comfort you derive
from this amazing compromise

*Kirpal Singh*

# சிங்கப்பூர் காண வந்தோனுக்கு

*நீ செல்வங்களையெல்லாம் சுமந்து கொண்டு*
*என் நாட்டுக்கு வருகிறாய்.*
*நாங்கள் உனக்கு ஒரு வசதியான நிறுத்தம் தருகிறோம்.*
*எங்களை வசப்படுத்த அனுமதிக்கிறோம்.*
*எம் அழகுப் பெண்களைக் கவர்ந்திழுக்கவும்*
*எம் கரவற்றமையை ஊழலாக்கவும் விடுகிறோம்.*
*ஏனெனில் நாங்கள் உயிர்வாழ உன்பணம் தேவைப்படுகிறது*

*வீடு திரும்பியதும்*
*எங்கள் திறன்மிகு தூய நகரை*
*விவரிக்கிறாய்.*
*ஆயின்*
*எம் அரசியலை நீ இகழ்கிறாய்.*
*எங்கள் வாழ்க்கை முறை*
*மூச்சு முட்டுவதாகவும்*
*அடிமைப் படுத்துவதாக இருப்பதாகவும்*
*உரைக்கிறாய்.*

*இருப்பினும்*
*மீண்டும் மீண்டும் நீ திரும்பி வருகிறாய்,*
*எங்கள் வாழ்வியத் தேவையில் வளம் பெற்று*
*அடிக்கடி நான் அதிசயிக்கிறேன்.*
*இந்த வியத்தகு இருதிற உடன்பாட்டில்*
*நீ என்ன சுகம் பெறுகிறாய் என்று.*

**– கிர்பால் சிங்**

# Change

my world has changed,
keeps changing,
where is that temple
I went to with my granny?
where is the school
where I broke records?
time, you've undone me
you came so fast
i could not belive
my experience was so short-lived.

*Kirpal Singh*

# மாற்றம்

என் உலகம் மாறிவிட்டது,
மாறிக் கொண்டே இருக்கிறது.
நான் என் பாட்டியுடன் சென்ற
அந்தக் கோவில் எங்கே?
நான் சாதனை முறிவுகள் செய்த
பள்ளி எங்கே?
காலமே நீ என்னை மாற்றிச்செய்து விட்டாய்.
நீ வந்த அதிவேகத்தில்
என் அனுபவம் அவ்வளவு குறுங்காலத்தது
என்பதை
என்னால் நம்ப இயலவில்லை.

– கிர்பால் சிங்

# In the Month of July

Childhood is far away
Beneath a tree
playing with pebbles
skillfully tossing them from
back if hand
to palm
requiring a certain skill and
magical ritualistic incantations

As one grows older
the pebbles grow too
into great stones and
rocks hurled with violence
smashed skulls spilled brains
splattering the pavements

In the month of July
a man fled from his pursuers
he climbed a tree
the mob aimed stones at him
Until they got him down
probably fell off, his grasp loosened
slippery with blood, his body already battered
and then they trampled him to death.

*Jean Arasanayagam*

# ஜூலை மாதத்தில்

குழந்தைப் பருவம்
வெகு தூரத்தில் இருக்கிறது,
ஒரு மரத்தினடியில்
கூழாங்கற்கள் கொண்டு விளையாடல்,
கரத்தின் பின் பகுதியிலிருந்து
திறம்பட உள்ளங்கைக்கு வீசிமாற்றல்.
ஒரு குறிப்பிட்ட திறனும்
சடங்குமுறை சார்ந்தமையும்
தேவை அதற்கு.

ஒருவன் வளர வளரக்
கூழாங்கற்களுங்கூட வளர்கின்றன.
பெருங்கற்களாக,
வன்முறையுடன் வீசும்பெரும் பாறைகளாக.
நொறுக்கப்பட்ட மண்டையோடுகளாக
நடைபாதைக் கரைகளில் சிதறும் மூளைகளுடன்.

ஜூலை மாதம்
ஒரு மனிதன்
தன்னைத் துரத்தியோரிடமிருந்து தப்பியோடினான்.
அவன் ஒரு மரத்தின்மீது ஏறினான்.
அவனைக் கீழிறக்கும்வரை
கலகக் கும்பல் அவன்மீது கற்களைக் குறி வைத்தது.
ஒரு வேளை அவனே விழுந்திருக்கலாம்
இரத்தத்தால் வழுக்கலாகிப் போன தன்
கரங்களின் பிடி தளர்ந்து.
அவன் உடல் ஏற்கனவே உருக்குலைந்துவிட்டது.
பின்
அவர்கள் அவனை மிதித்துக் கொன்றனர்.

ஜீன் அரசநாயகம்

## The Man with the Wooden Leg

There was a man lived quite near us;
He had a wooden leg and a goldfinch in a green cage.
His name was Farkey Anderson,
And he'd been in a war to get his leg.
We were very sad about him,
Because he had such a beautiful smile
And was such a big man to live in a very small house.
When he walked on the road his leg did not matter so much;
But when he walked in his little house
It made an ugly noise.
Little Brother said his goldfinch sang the loudest of all birds,
So that he should not hear his poor leg
And feel too sorry about it.

*Katherine Mansfield*

# மரக்கால் மனிதன்

*எங்களுக்கு வெகு அருகில் ஒரு மனிதன் வாழ்ந்தான்*
*அவன் ஒரு மரக்காலும்*
*ஒரு பச்சைக் கூட்டில் ஒரு பொற்பறவையும் வைத்திருந்தான்*
*அவன் பெயர் ஃபார்க்கி ஆன்டர்சன்*
*அவன் தன் மரக்காலை ஒரு போரில் பெற்றிருந்தான்*

*நாங்கள் அவனைக் குறித்து வருந்தினோம்,*
*ஏனெனில் அவனிடம் அவ்வளவு அழகான*
*ஒரு சிரிப்பு இருந்தது.*
*ஒரு சிறிய வீட்டில் வாழ்வதற்கு*
*அவன் ஒரு மிகப்பெரிய மனிதனாக இருந்தான்.*
*அவன் தெருவில் நடந்தபொழுது*
*அது ஒரு அசிங்கமான ஒலியை எழுப்பியது*
*சின்னத் தம்பி சொன்னான்,*
*அவனது பொற்பறவை*
*எல்லாப் பறவைகளையும் விட அதிகமாகப் பாடியது,*
*அவன் தனது பரிதாபமான காலொலி*
*கேட்டு வருந்தாதவாறு என்று.*

**– கேதரீன் மேன்ஸ்ஃபீல்ட்**

## I'm Older than You, Please Listen

To the young man I would say:
Get out! Look sharp, my boy,
before the roots are down,
before the equations are struck,
before a face or a landscape
has power to shape or destroy.
This land is a lump without leaven,
a body that has no nerves.
Don't be content to live in
a sort of second-grade heaven
with first-grade butter, fresh air,
and paper in every toilet;
becoming a butt for the malice
of those who have stayed and soured,
staying in turn to sour,
to smile, and savage the young.
If you're enterprising and able,
smuggle your talents away,
hawk them in livelier markets
where people are willing for roughage,
if patience isn't your religion,
if you must have sherry with your bitters,
if money and fame are your pigeon,
if you feel that you need success

# நான் உனக்கு மூத்தவன் தயைசெய்து செவி கொடு

*இளைஞனுக்கு நான் ஒன்று சொல்வேன்; வெளியே வா!*
*விழுதுகள் இறங்குமுன்,*
*சரிசமானங்கள் கிடைக்கப் பெறுமுன்*
*ஒரு முகமோ, நில அமைப்போ உருவாக்குவதற்கோ*
*அழிப்பதற்கோ சக்தி பெறுமுன்,*
*கூர்ந்து பார், பையா.*

*இந்த பூமி*
*தழையே இல்லாதவொரு கட்டிக் குவியல்,*
*நரம்புகளற்றதோர் உடல்.*

*முதல்தர வெண்ணெய், தூய காற்று,*
*ஒவ்வொரு கழிவறையிலும் தாள்,*
*தங்கிக் கசந்தவர்கள்,*
*கசப்பதற்குத் தங்குபவர்கள்,*
*சிரிப்பதற்கும்*
*இளைஞாகளைக் காட்டுமிராண்டிகள்*
*ஆக்குதற்குமானவர்கள் பொறாமைக்கு*
*அடிதாங்கியாகிக்கொண்டு*
*இரண்டாந்தர சொர்க்கத்தில்*
*வாழ்வதோடு மனம் நிறையாதே!*

*நீ*
*முனைப்பும் திறமையும் கொண்டிருப்பின்,*
*உன் சாமர்த்தியத்தைக் கொண்டு செலுத்தக் கூடுமெனில்*
*அதிவர்த்தகச் சந்தைகளில் அவற்றைக் கிரயமாக்க இயலுமெனில்*
*மக்கள் நயமின்மைக்குத் தயாரெனில்,*

and long for a good address,
don,t anchor here in the desert—
the fishing isn't so good;
take a ticket for megalopolis,
don't stay in this neighbourhood!

*A.R.D. Fairburn*

*பொறுமை உனது மதமில்லையெனில்*
*உனது கசப்புகளுடன் நீ திராட்சை ரசத்தையும்*
*அவசியம் கொள்வாயெனில்*
*பண்பும் புகழும் உனது விவகாரம் எனில்*
*உனக்கு வெற்றி வேண்டுமென நீ உணர்வாயெனில்*
*ஒரு நல்ல முகவரிக்கு ஏங்குபவனெனில்*
*இங்கே பாலைவனத்தில் நங்கூரமிடாதே!*
*மீன்பிடித்தல் அவ்வளவு நன்றாக இல்லை;*
*பேருலகிற்கு ஒரு பயணச் சீட்டு பெறு*
*இந்தச் சுற்று வட்டாரத்தில் தங்காதே*

**– ஏ.ஆர்.டி. ஃபேர்பர்ன்**

# Time

I am the nor'west air nosing among the pines
I am the water-race and the rust on railway lines
I am the mileage recorded on the yellow signs.

I am dust, I am distance, I am lupins along the beach
I am the sums the sole-charge teachers teach
I am cows called to milking and the magpie's screech.

I am nine o'clock in the morning when the office is clean
I am the slap of the belting and the smell of the machine
I am the place in the park where the lovers were seen.

I am recurrent music the children hear
I am level noises in the remembering ear
I am the sawmill and the passionate second gear.

I, Time, am all these yet these exist
Among my mountainous fabrics like a mist,
So do they the measurable world resist.

I, Time, call down, condense, confer
On the willing memory the shape these were:
I, more than your conscious carrier,

Am island, am sea, am father, farm, and friend;
Though I am here all things my coming attend;
I am, you have heard it, the Beginning and the End.

***Allen Curnow***

# காலம்

*நான் பைன்களினூடே மூக்கை நுழைக்கும் வடமேற்குக் காற்று,*
*நான் நீரினம், இரயில் தண்டவாளங்களின் துரு,*
*மஞ்சள் அடையாளங்களில் பொறிக்கப் பெற்றிருக்கும் மைல் அளவு நான்.*
*நான் தூசி, நான் தூரம், நான் கடற்கரையில் காணும்*
*விலங்குணவுத் தாவரங்கள்*
*நான் ஆசிரியர்கள் கற்பிக்கும் மொத்த ழுமை*
*நான் கறப்பதற்கு அழைக்கப்படும் மாடுகள்,*
*குருவிகளின் கீச்சொலி.*

*நான் அலுவலகம் தூய்மையாய் இருக்கின்ற காலை ஒன்பது மணி*
*நான் வாரின் தட்டைப்பகுதி, இயந்திரத்தின் நெடி*
*நான் பூங்காவில் காதல்கள் காணப்படும் இடம்*

*நான் குழந்தைகள் மீண்டும் மீண்டும் செவியுறும் பாடல்*
*நான் நினைவுக் கொள்திறன்காதில் சிரான ஒலிகள்*
*நான் மரஅறுவை ஆலை, உணர்ச்சியுறு இரண்டாம் நெம்புகை.*
*நான், காலம், இவையனைத்தும், இருப்பினும் இவை*
*எனது மலையத்தனை அமைப்பினூடே பனிபோல் உள*
*அவ்வாறே அளக்கக்கூடிய உலகை அவை மறுக்கின்றன.*

*நான், காலம்,*
*இவையனைத்தும் கொண்ட உருவத்தை*
*அழைத்து, சுருக்கி, வழங்குவோன்*
*நான் உனது மனச்சாட்சி சுமப்போன் மட்டுமல்ல,*
*அதனினும் அதிகமானவன்.*

*நான் தீவு, கடல், தந்தை, நண்பன்,*
*நான் இங்கிருப்பினும் அனைத்தும்*
என் வருகையை எதிர்பார்த்திருக்கின்றன
நான், நீ கேள்வியுற்றுள்ளாய், முதலும் முடிவும்.

**– ஆலன் கர்னவ்**

## Pig Island Letters

Stat crux dum volvitur orbis:*
I will sing

In the whale's belly.
        'Great Mother of God
Sweeten my foul breath. I wait for a death.
Cradle me, Lady, on the day they carry
My body down the bush track to the road
To the rollers of the decorous van.
The leper's stump, the thick voice of the drunk,
Are knocking at Nazareth. I am a naked man.'
'How can I let you in?
The time for talk has gone;
A mountain is the threshold stone.'

'Mother, I come alone.
No books, no bread
Are left in my swag.'

'Why are your hands not clean?'
'There was no soap in the whole damned town.'
'God's grace has need of man's apology.'
'Your face is my theology.'

---

* 'Christ's cross will endure as long as earth rotates.'

# பன்றித் தீவு மடல்கள்

*ஏசுவின் சிலுவை இந்த உலகு சுற்றுமளவு தாங்கியிருக்கும்*
*திமிங்கலத்தின் வயிற்றினுள் நான் பாடுவேன்.*
*"இறைவனின் தாயே*
*என் மலின சுவாசத்தை நறுமணமாக்கு*
*நான் இறப்பிற்குப் காத்திருக்கிறேன்.*
*எனது உடலைப்*
*புதர்ப்பாதை வழியே*
*சாலைக்கு அலங்கரித்த ஊர்திக்கு*
*அவர்கள் எடுத்துச் செல்லும்பொழுது*
*என்னைத் தாலாட்டு சீமாட்டியே*
*தொழுநோயாளியின் கூழையும்*
*கடிகாரனின் கனத்த குரலும்*
*நாசேரத்தில் கதவைத் தட்டுகின்றன.*
*நான் ஒரு நிர்வாண மனிதன்'*
*"நான் எப்படி உன்னை உள்ளே அனுமதிப்பது?*
*பேச்சுக்கான காலம் கடந்துவிட்டது.*
*முன்வாசற்கல்லாக ஒரு மலை இருக்கிறது"*
*"தாயே, நான் தனியே வருகிறேன்.*
*எனது கைப்பையில்*
*புத்தகங்கள் இல்லை, ரொட்டி இல்லை"*
*"உனது கரங்கள் ஏன் சுத்தமாக இல்லை?"*
*"மொத்த நகரத்திலும் சவர்க்காரம் இல்லை"*
*"கடவுளின் கருணைக்கு மனிதனில்*
*மன்னிப்புக் கோரல் தேவைப்படுகிறது"*
*'உன் முகம் எனது வேதசாத்திரம்!*
*'ஆம், ஆனால் நான்*
*உனக்குக் கொண்டு வருவதற்கு*
*ஒரு ஆபரணம் கொடுத்தேன்?"*
*'வாடாமுட்செடியின் அடர்த்தியில்*
*அருவி நீர்க் கழிகாலில்*

'Yes; but I gave you a jewel to bring.'
'In the thick gorse of the gully
I lost your signet ring.'

'Why should I listen then?'
'On Skull Hill there was none,
No, scapular, no sign,
Only the words, I *thirst*,
When the blood of a convict burst
From the body of your son.'

'You may come in.'
Is it like that? At least I know no better;
After a night of argument
Mythical, theological, political,
Somebody has the sense to get a boat

And row out towards the crayfish rocks
Where, diving deep, the downward swimmer
Finds fresh water rising up,
A mounded water breast, a fountain,
An invisible tree whose roots cannot be found;

As that wild nymph of water rises
So does the God in man.

Brother Ass, Brother Ass, you are full of fancies,
You want this and that – a woman, a thistle,

உங்களது முத்திரை மோதிரத்தைத்
தொலைத்து விட்டேன்.”
“பின் ஏன் நான் செவியுற வேண்டும்?”
“மண்டையோட்டுக் குன்றின் மீது
தங்கள் மகனின் உடலிலிருந்து
ஒரு குற்றவாளியின் குருதி
வெடித்தக் கொப்புளித்த போது
நான் தாகமுற்றிருக்கிறேன்
என்ற வார்த்தைகள் தவிர
எந்தத் தோட்பட்டையும்
எந்த அடையாளமும்
இல்லை”
‘நீ உள்ளே வரலாம்’
‘அது அப்படியாகிறதா?
குறைத்துச் சொல்லினும்
நான் அதைத்தவிர வேறேதும் அறியேன்.
ஒரு முழு இரவு
புராணத்துவ
மத மார்க்கமான
அரசியல்
தர்க்கத்திற்குப் பின்
ஏதோ ஒருவருக்கு
ஒரு படகைப் பெற்று
கீழ்நோக்கி நீந்துவோன்
ஆழமாக மூழ்கி
நன்னீர் மேலெழுவதைக் கண்ணுறும்
நண்டுப் பாறைகளை நோக்கிச்
செலுத்தும் அறிவு உள்ளது.
ஒரு முகடு மேடிட்ட தண்ணீர் மார்பகம்
ஒரு நீருற்று,
வேர்கள் காணவியலாத வொரு
பார்க்க முடியாத மரம்.
அந்த நீர் நங்கைத்
தண்ணீர் எழுகிறது.

A poem, a coffeebreak, a white bed, no crabs;
And now you complain of the weight of the Rider

Who will set you free to gallop in the light of the sun!
Ah well, kick Him off then, and see how you go

Lame-footed in the brambles; your disconsolate bray
Is ugly in my ears-- long ago, long ago,

The battle was fought and the issue decided
As to who would be King – go on, little donkey

Saddle and bridled by the Master of the world,
Be glad you can distinguish not an inch of the track,

That the stones are sharp, that you hide can itch,
That His true weight is heavy on your back.

*James Baxter*

அதுபோலவே மனிதனில் கடவுளும்.
சகோதரக் கழுதையே, சகோதரக் கழுதையே,
நீ மனோ கற்பனங்கள் நிறைந்தவனாயுள்ளாய்.
உனக்கு இது அது எல்லாம் தேவைப்படுகிறது—
பெண்; முள்; கவிதை;
காப்பி இடைவேளை; வெண்படுக்கை,
வெட்டெனப் பேசல் அற்றமை.

தற்பொழுது
சூரியனின் ஒளியில் நீ பாய்ந்தோட
உன்னை விடுவிக்கப் போகும்
உன்னைச் சவாரி செய்யும்
பயணியின் கனத்தைக் குறைகூறுகிறாய்.
சரி, ஆகட்டும், அவனை உதைத்துத் தள்ளிவிடு
பின்
பார், எப்படி முட்புதர்களில் நீ
நொண்டிக் காலுடன் செல்கிறாய் என்று.
உன் திக்கற்ற ஆற்றவொண்ணாக் கத்தல்
என் காதுகளில் கர்ணகடூரமாக உள்ளது.
பலப்பல காலத்திற்கு முன்பு
சண்டை நடத்தப் பெற்று
யார் மன்னனாக இருப்பது
என்பது தீர்மானிக்கப் பட்டுவிட்டது.
தொடர்ந்து செல், சிறிய கழுதையே
உலகின் தலைவனால் சேணமிடப்பட்டு, கடிவாளமிடப்பெற்று,
பாதையின் ஒரு அங்குலத்தைக்கூட
உன்னால் அடையாளங்காண இயலவில்லை.
கற்கள் கூராகவுள்ளன,
உனது தோலால் அரித்துக்கொள்ள இயலும்,
அவனது உண்மைச் சுமை உனது
முதுகின் மீது கனமாக உள்ளது
என்பன குறித்து மகிழ்ச்சி கொள்.

— ஜேம்ஸ் பாக்ஸ்டர்

## The Postman

This cargo of confessions, messages,
demands to pay, seems none of my concern;
you could say I'm sort of go-between
for abstract agents trusting wheels will turn,
for censored voices stilled in space and time.

Some people stop me for a special letter;
one or two will tell me, if it's fine, that I
have picked the right job for this kind of weather.
A boy who understands life somewhat better
asks where postmen live – if not our office, why?

The work is quite routine but kindnesses
and awkward problems crop up now and then:
one old lady sometimes startles passers-by
claiming she is blameless as she hisses
at people present in her reminiscent ken;

she startled me as well the other day,
gave me a glass of lemonade and slipped
me a letter to deliver – 'Don't you say
a word to anyone, it's no concern
of theirs, or yours.' Nor no more it was, except

# தபால்காரன்

பாவ சங்கீர்த்தனங்கள், செய்திகள் , பற்றுச்சீட்டுகள்
ஆகியவான இச்சரக்கு
எதுவும் எனது பொறுப்பு அல்ல,
சக்கரங்கள் சூழலும் என நம்பும்
ஏகாந்தக் காரியக்காரர்கள்
வெட்ட பெளியிலும் காலத்திலும்
நிறுத்தி வைக்கப்பட்ட
தணிக்கைப்பட்ட குரல்கள்
நான் ஒரு நடுவணன் என்று கூறலாம்.

சிலர் ஒரு குறிப்பிட்ட கடிதத்திற்காக
என்னை நிறுத்துகின்றனர்.
ஓரிருவர்
இந்தத் தட்ப வெப்பத்திற்கேற்ற தொழிலை
நான் நல்லபடியாகத் தேர்ந்தெடுத்துள்ளேன்
என்கின்றனர்

வாழ்க்கையை அவரினும் அதிகமாகப் புரிந்துகொண்ட
சிறுவன் கேட்கிறான்,
'தபால்காரர்கள் எங்கே வாழ்கிறார்கள்?
தபால் நிலையத்தில் இல்லையெனில்
அது ஏன்? என்று.

வேலை எப்போதும் உள்ளதுதான்
ஆனால் கருணைகளும்
கொச்சைப் பிரச்சனைகளும்
அவ்வப்போது தலைதூக்கும்.

here was this letter plainly marked 'To God'
and therefore insufficiently addressed.
I cannot stamp it now 'Return to sender'
for addressee and sender my be One. The best
thing is burn it, to a back rose He'll remember.

*Gordon Challis*

ஒரு கிழவி சிலசமயம்
தனது நினைவுக்கு வரும் உறவுகளைப் பற்றிச்
சீறவும்
தான் குற்றமற்றவள் என்றுரைத்தும்
வழிப்போக்கர்களை அதிர்ச்சியுறவும் செய்கிறாள்.

அன்றொரு நாள்
அவள் எனக்கு எலுமிச்சை பானம் கொடுத்து
என்னிடம்
ஒரு கடிதம் பட்டுவாடா செய்யச்சொல்லி
அதிர்ச்சி கொடுத்தாள்–
யாரிடமும் ஒரு வார்த்தை சொல்லதே
இது
அவர்களோ அல்லது நீயோ
சம்பந்தப்பட்டதல்ல...
அது ஒன்றும் பெரிய பிரச்சனையல்ல,
ஒரு விசயத்தைத் தவிர,

"இந்தக் கடிதம் கடவுளுக்கு"
என்று மட்டும் குறிக்கப் பெற்றிருந்தது,
எனவே முழுமையான முகவரியற்றிருந்தது.
நான் அதை இப்பொழுது
"அனுப்புநருக்குத் திருப்பி"
என்று முத்திரையிட இயலாது.
ஏனெனில்,
முகவரியாளரும் அனுப்புநரும் ஒருவரேயாக இருக்கலாம்.
அதிகபட்சம் செய்யக்கூடியது என்னவெனில்
அதனை எரித்துவிடுவது,
ஆண்டவன் நினைவில் கொள்ளும்
ஒரு கறுப்பு ரோஜாவாக.

– கார்டன் ச்சேலிஸ்

## I am not that Woman

I am not that woman
selling you socks and shoes!
Remember me, I am the one you hid
in your walls of stone, while you roamed
free as the breeze, not knowing
that my voice cannot be smothered by stones.

I am the one you crushed
with the weight of custom and tradition
not knowing
that light cannot be hidden in darkness.
Remember me,
I made the one in whose lap
you picked flowers
and planted thorns and embers
not knowing
that chains cannot smother my fragrance.

I am the woman
whom you bought and sold
in the name of my own chastity
not knowing
that I can walk on water
when I am drowning.

# நான் அந்தப் பெண் அல்ல

நான்
உனக்குக் காலுறையும் காலணியும்
விற்கும் அந்தப் பெண் அல்ல
என்னை நினைத்துப் பார்.
எனது குரலைக்
கற்களால் உள்ளடக்க
இயலா தென்பதறியாது
தென்றலைப் போல் சுதந்திரமாய்
நீ உலவிக் கொண்டு
உனது கற்சுவர்களுக்குள்ளே ஒளித்து வைத்தாயே
அது நான் தான்
ஒளியை இருளில் ஒளிக்க இயலாது
என்பதறியாமல்
பழக்கவழக்கங்கள், மரபு
ஆகியவற்றால் நசுக்கினாயே
அது நான் தான்.
என்னை நினைத்துப் பார்.
தளைகளால் எனது நறுமணத்தை
அமிழ்த்துவிட இயலாது
என்பதறியாமல்
ஒருத்தி மடியில் மலர் பறித்து
முள்ளும் கங்கலும் நட்டாயே
அது நான் தான்.
என்னால்
மூழ்கிக் கொண்டிருக்கும்போது
நீரின்மேல் நடக்க இயலும்
என்பதறியாது
எனது கற்பின் பெயராலேயே

I am the one you married off
to get rid of a burden
not knowing
that a nation of captive minds
cannot be free.

I am the commodity you traded in,
my chastity, my motherhood, my loyalty.
now it is time for me to flower free.
The woman on that poster,
half-naked, selling socks and shoes—
No, no I am not that woman!

*Kishwar Naheed*

என்னை வாங்கவும் விற்கவும் செய்தாயே,
அந்தப் பெண்தான் நான்.
சிறைப்பட்ட சிந்தையினர் நிறை நாடு
விடுதலை பெற்றிருக்க இயலாது
என்பதறியாது
ஒரு சுமையைக் குறைக்க
மணம் (செய்)கொடுத்தனுப்பினாயே
அது நான் தான்.
என் கற்பு, என் தாய்மை, என் விசுவாசம்
என்று
உன்னால் வியாபாரம் செய்யப்பட்ட
பொருள் நான்.
இப்போது
எனக்குச் சுதந்திரமாக மலரும் காலம்.
அந்தச் சுவரொட்டியில்,
அரை நிர்வாணமாய்
காலுறைகளும், காலணிகளும் விற்கிறாளே
அந்தப் பெண்,
இல்லை,
நான் அந்தப் பெண் இல்லை.

– கிஷவர் நஹித்

## Nowhere, no Trace Can I Discover

Nowhere, no trace can I discover
of spilt blood,
not on the murderer's hand nor on his sleeve;
no daggers with red lips nor scarler-pointed words.
I see not blots on the dust,
no stains no the walls.

Nowhere, nowhere
does the blood reveal its darkness.

Not spilt in grandeur
nor as ritual sacrifice,
it was not shed on the field of battle,
it did not raise a marty's banner.

Screaming loudly the orphan blood flowed on.
No-one had the time or sense,
none bothered to listen.

No witness, no defence;
the case is closed.
The blood of the downtrodden
seeped mutely into the dust.

*Faiz Ahmad Faiz*

# எங்கும் எந்த அடையாளமும்
# என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை

*கொலையாளியின் கரத்திலோ சட்டைக் கையிலோ*
*எங்குமே*
*சிந்திய குருதியின் அடையாளம்*
*என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை.*
*செவ்விதழ் கொண்ட குத்தீட்டிகளையோ*
*சிவப்பு நுனி வாட்களையோ*
*கண்டுபிடிக்க இயலவில்லை.*
*தூசியில் பொழிவுகளோ*
*சுவர்களில் கறைகளோ*
*இல்லை.*
*எங்குமே, எங்குமே*
*இரத்தம்*
*தன் இருளினைத் திரை விலக்கவில்லை.*
*பெருமிதத்தில் பிளவாகவோ*
*சடங்கில் பலியாகவோ அல்ல.*
*அது*
*போர்க்களத்தில் சிந்திடவில்லை.*
*ஒரு தியாகியின் விளம்பரப் பட்டிகையை*
*அது உயர்த்தவில்லை.*
*அந்த அனாதை இரத்தம்*
*பெருங்குரலில் அலறியபடி*
*ஓடிக் கொண்டே இருந்தது.*
*ஒருவருக்குமே நேரமோ எண்ணமோ இல்லை,*
*செவியுற எவரும் சிரத்தை கொள்ளவில்லை.*
*சாட்சியில்லை, தற்காப்பில்லை*
*வழக்கு முடிக்கப்பட்டுவிட்டது.*
*ஒடுக்கப்பட்டோரின் இரத்தம்*
*ஊமையாகத்*
*தூசியினுள் இறங்கியது.*

**– ஃபைஸ் அகமது ஃபைஸ்**

# My Guests

The door opens
on my sadness;
there they come, my guests.
There she is, the evening
to lay a carpet of despair.
There goes the night
to speak of pain to the stars.
Here comes the morning
with its shining scalpel
to open the wound of memory.
Then there is afternoon
hiding whips of flame in its sleeve.
All these are my guests
who come to see me day and night.
But when they come
and when they go,
I do not know.
My thoughts are always
drifting homeward,
holding doubts and suspicions,
asking many questions.

*Faiz Ahmad Faiz*

# என் விருந்தினர்கள்

கதவு திறக்கிறது
என் சோகத்தின் மீது.
அதோ வருகின்றனர் அவர்கள்
என் விருந்தாளிகள்.
அதோ அவள் – மாலை,
வேதனைக் கம்பளத்தை விரிக்க.
அதோ இரவு செல்கிறது
விண்மீன்களிடம் வலியைப் பேச.
இதோ வருகிறது காலை
தன் பளபளப்புக் கத்தியுடன்,
நினைவென்னும் இரணத்தைத் திறக்க
பின் பிற்பகல் இருக்கிறது
நெருப்புச் சவுக்குகளைச் சட்டைப் பையில் மறைத்துக் கொண்டு.
இவையெல்லாம்
பகலும் இரவும் எனைக் காணவரும்
என் விருந்தினர்கள்.
ஆனால் அவர்கள் எப்போது வருகிறார்கள்
எப்போது செல்கிறார்கள்
நானறியேன்.
என் நினைவுகள் எப்போதும்
வீடு நோக்கிப் படர்கின்றன.
ஐயங்களும் சந்தேகங்களும் சுமந்து,
வினாக்கள் பல வினவிக்கொண்டு.

– ஃபைஸ் அகமது ஃபைஸ்

## Loneliness

Has anyone come again, sad heart?
No, there is no-one[4] there.
A wayfarer perhaps?
He'll go elsewhere.

The night has melted into nothingness,
the dim twinkling of stars
has disappeared.
The sleepy lamp falters in the hallway;
the street has fallen asleep,
giving up on travellers.
Alien dust
has wiped out all the footprints.
Blow out the lamps,
take away the wine, the glass and bottle.

Lock your dreamless doors!
No-one will come here now
no-one
no more.

*Faiz Ahmad Faiz*

# தனிமை

யாராவது மீண்டும் வந்துள்ளார்களா
என் சோக இதயமே?
இல்லை, அங்கு யாருமில்லை.
தெருவோரப் பயணி யாராவது?
அவன் வேறெங்காவது செல்வான்.
இரவு உருகி வெறுமைப்பட்டு விட்டது.
விண்மீன்களின் மங்கிய சிமிட்டல் மறைந்துவிட்டது.
தூங்கிவழியும் விளக்கு மண்டபச் சாலையில் நடுங்கித் தள்ளாடுகிறது.
தெரு பயணிகளுக்கு இடம் விட்டு
உறங்கி விட்டது.
அனைத்து அடிச்சுவடுகளையும்
அந்நியச் தூசி துடைத்துவிட்டது.
விளக்குகளை ஊதி அணை.
திராட்சை ரசத்தையும்
கண்ணாடிக் குவளையையும்
குப்பியையும்
அப்புறம் எடுத்துச் செல்.
கனவுகளற்ற உன் கதவுகளைப் பூட்டு.
யாரும் இப்போது இங்கு வரமாட்டார்
யாரும்
இனி எப்போதும்.

– ஃபைஸ் அகமது ஃபைஸ்

## Voice of Stone

You met me on this lonely hill;
this is the peak of our meeting,
this the stone of my loyalty,
naked, wild, sad and desolate.

For centuries
I have stood, embracing it,
collecting your breath in a torn shawl,
my dress billowing in the wind's cruel current.
Still I cling to the sharp dagger-points of stone
which have pierced so deep into my heart
that my blood has stained everything
but for centuries
I have stood embracing it, embracing it.
And I send a message to you
with a soaring bird:
If you could see me,
would you not be happy?
Stones turn to glittering diamonds,
roses grow from stone.

*Fahmida Riaz*

# ஒரு கல்லின் குரல்

*இந்தத் தனிக்குன்றில்தான் என்னை நீ சந்தித்தாய்,*
*இது தான் நம் சந்திப்பின் சிகரம்.*
*நிர்வாணமான, வனாந்தரமான, சோகமான, அனாந்தரமான*
*என் விசுவாசத்தின் கல்*
*இதுதான்.*
*காற்றின் கொடிய அலையில் என் ஆடைகள் அலைக்கழிய*
*உன் சுவாசத்தை ஒரு கிழிந்த உத்தரீயத்தில்*
*பொறுக்கி எடுத்துக் கொண்டு*
*நூற்றாண்டுகளாக நான் நின்றிருக்கிறேன்,*
*இதனைக் கட்டியணைத்துக் கொண்டு.*
*இன்னும்*
*எனது இரத்தம் எல்லாவற்றையும் கறையாக்குமாறு*
*என் இதயத்தை ஆழத் துளைத்த*
*குத்துவாள்நுனிக் கதுப்புக் கல் முனைகளைப்*
*பற்றிக் கொண்டிருக்கிறேன்.*
*நூற்றாண்டுகளாக*
*நான் அதைக் கட்டியணைத்துக் கொண்டு நிற்கிறேன்,*
*கட்டியணைத்துக் கொண்டு.*
*உயரப் பறந்துவரும் பறவையிடம்*
*உனக்கொரு செய்தி அனுப்புகிறேன்:*
*என்னைப் பார்க்க முடிந்தால் நீ மகிழ்வாயல்லவா?*
*கற்கள் மினுமினுக்கும் வைரங்களாகின்றன.*
*ரோஜாக்கள் கல்லிலிருந்து வளர்கின்றன.*

**– ஃபைஸ் அகமது ஃபைஸ்**

## On the Tenth Night of the Tenth Moon I Walk by the West Lake and Meet Another Me

On the tenth night of tenth moon
I walked by the West Lake contemplating
The wind and clouds. My shadow
Walked ahead of me, another me
Facing my graying head shaking,
Not with palsy, but to attract my gaze.

"Who are you that walk in pursuit of me?"
Said the shadow. "Wherever I go you follow me."
"I thought," said I, "that it were you
Who always walked ahead of me
Or dogged my steps wherever I went.
It's time this pretence came to end."
And I pulled my sword and raised
It in the air to settle for ever this duality.

Empty laughter filled my ears as I cut
The frosty air, my enemy performing
The same gesture."you are not you,
Nor I am I,"said he, and opened his arms
Which I Put around my neck, and met
Li Po embracing the moon in the Nether World
Across the Yellow Springs.

***Ahmed Ali***

# பத்தாவது நிலவின் பத்தாவது இரவில் மேலை ஏரி அருகே நடக்கையில் இன்னொரு என்னைச் சந்திக்கிறேன்

பத்தாவது நிலவின் பத்தாவது இரவில்
மேலை ஏரிக்கரையில் நடந்தேன்
காற்றும் மேகங்களும் கருத்தில் நிறுத்தி,
என் முன்னே சென்றது என் நிழல், இன்னொரு நான்
என் முதிரும் முகங்கண்டபடி, நடுங்கிக் கொண்டே,
முதுமையால் அல்ல, என் பார்வையைக் கவருவதற்கு.
“என்னைத் துரத்தி நடக்கும் நீ யார்?”
சொன்னது நிழல். “எங்கு செல்லினும் நீ எனைத் தொடர்கிறாய்”
“நீதான் எப்பொழுதும் என் முன்னே செல்கிறாய்
அல்லது
காலில் பின்னுகிறாய் எங்கெங்கு செல்லினும்
என்று நினைத்தேன்” சொன்னேன் நான்.
“இப்பாசாங்கை முடிக்க நேரம் வந்துவிட்டது”
பின்
என் வாளை உருவி வானில் உயர்த்தினேன்
இந்த மல்லுக்குத் தீர்வு காண.
பனிக் காற்றை நான் வெட்ட
என் பகைவனும் அதையே செய்ய
வெற்றுச் சிரிப்பு நிறைத்ததென் செவியை.
“நீ நீவல்ல, நானும் நானல்ல” என்றான் அவன்,
தன் கரங்களை விரித்தான்.
அவற்றை என் கழுத்தில் சுற்றிய நான்
மறு உலகில் நிலவை அணைக்கும்
லீ போவை மஞ்சள் ஊற்றுக்கு அப்பால் சந்தித்தேன்.

– அகமது அலி

## Dialogue with Lee San

When young the thought of death
Had never crossed our minds, Lee San.
We had no time for it; and even when
We sought it in the bitter frustrations of youth,
It was fulness of experience and old-age maturity
We desired and falsely assumed, never thinking
That when we are old and weary and full
Of the sadness of life, no friend
Shall visit us from the past
To keep us company in the loneliness of age,
Perhaps, having passed beyond the circle of death,
You have found the secret of peace in the Nether World.

"Deep under the frozen earth," said Lee San,
"The moss dreams of Summer the Winter long,
And, thrusting the cold crust of snow,
Raises its face towards the light
With patient persistence braving the wind
To make for itself a place in the sun.
Green grow the weeds, the flowers fade away.
Nothing lives, nothing dies: only these
Alternations of night and day
Bring news of the seasons eternally."

But the shame of one's own actions, said I,
And the feeling of regret in the bones at the failure to meet
Life's obligations with life's failing strengths,
And the sense of the guilt of many wrongs,
Of meeting favours with pride, love with arrogance,
Multiplies and remains.

# லீ சேனுடன் உரையாடல்

லீசேன் இளமையில்
இறப்பின் சிந்தனை
நம் உள்ளத்தைத் தீண்டியதே இல்லை;
நமக்கு அதற்கு நேரமில்லை.
இளமையின் கசப்பான விரக்திப் பொழுதுகளில்
நாம் அதைத் தேடியபோது கூட
நமது முதுமையில் களைத்து,
வாழ்வின் சோகங்கள் நிறைய இருக்கும்பொழுது
வயதின் தனிமையில் நமக்குத் துணைத் தரப்
பழைய நட்பு எவரும் வாரார் என்பதை நினையாது
முழுமையான அனுபவமும்
முதிர்வயது முதிர்ச்சியும் விழைந்து,
தவறாக நாமாக நினைத்துக் கொண்டோம்
லீ சேன் சொன்னான்,
“உறைந்த மண்ணுக்கு ஆழக் கீழே
நீண்கூதிர் முழுவதும்
பாசி
கோடையைக் கனாக் காண்கிறது.
கதிரொளியில் தனக்கு இடம் தேடத்
தொடர் பொறுமையுடன்
காற்றைத் துணிந்தெதிர்த்துப்
பனியின் குளிர் ஓட்டைத் தள்ளிக்
கதிரொளிக்கு நேரே தன் வதனம் உயர்த்துகிறது.
இலைகள் பசுமையாக வளர்கின்றன;
மலர்கள் வாடுகின்றன
எதுவும் வாழ்வதில்லை; எதுவும் இறப்பதில்லை.
இரவு பகலென்னும் மாறுதல்களே
பருவங்களின் அழிவின்மைச் செய்தியைக் கொணர்கின்றன.
நான் சொன்னேன்,
வாழ்வின் கடமைகளை வாழ்வில் வீழும் பலமின்மையோடு
வாழ்க்கையின் கடமைகளை நிறைவேற்றாத தோல்வியால்
எலும்பில் உணரும் வருத்தம்,
நற்செய்கையை கர்வத்துடன் ஏற்றது.
அன்பை அகந்தையுடன் எதிர்கொண்டது போன்ற
பல தவறுகளின் குற்றவுணர்வு
ஆகிய
நம் செயல்களின் அவமானம்
பல்கி நிலைக்கிறது.

"A man's life," said Lee San, "is like
A Frog's in a well that looks at the patch
Of the sky that alone is visible, which he takes
For the universe. We think, so we are.
Cease to think, you will pass beyond being:
To be uncreated, identify."
Alas, said I, the cares of the moment
Fill the vision like the peaks of T'ien Shan.
And alas for man's ingratitude!
Bent under the load of years no choice has he
But to bear the burden of insults and the ironies of life.
Can you ask for atonement of wrongs
Done to yourself by your own hand?

"Not so," he replied as he sat on his jade throne,
Pointing to the earth in a gesture of peace.
"The source of right and wrong is the same.
You seek and do not find. So turn from desire
If you wish for poise and tranquillity.
Look at the bamboo and the pine, for ever green,
Filled with the calm of awareness and oneness of being.
You surround yourself with vanities that lead
In the end to a gossamer of cares the spider weaves
Into a web of the dream of passing things,

Prayer without faith, song devoid of song:
A lonely line of geese
Flapping its wings across the emptiness of space.
Detract and gather and narrow the circle to the point,
Disperse the caravans bearing
The merchandise of nothing to nothing.
And be ready to embrace
The beginning in the end."

*- Ahmed Ali*

ஒரு மனிதனின் வாழ்க்கை,
தான் வாழும் கிணற்றிலிருந்து
தனக்குக் காணக் கிடக்கும் வானத்தின் துண்டை
அண்டசராசரமென்று எண்ணும் தவளையைப் போன்றது.
நாமும் நம்மை அவ்வாறே நினைக்கிறோம்.
நினைப்பதை நிறுத்தினாயானால்
இருத்தலையும் கடப்பாய் நீ,
கண்டுகொள்வாய்,
படைக்கப்படாதிருப்பாய்" என்றான் லீசேன்.
"ஐயோ! நிகழ்கணத்தின் சுமைகள்
ட்டியன் ஷானின் சிகரங்களைப் போலப்
பார்வையை நிறைக்கின்றன.
ஐயகோ! என்னே மனிதனின் நன்றியற்றமை.
ஆண்டுகளின் சுமையின்கீழ் கூறும் மனிதனுக்கு
வாழ்வில்
சிறுமையின் கனத்தையும் விகடலங்காரங்களையும்
தாங்கிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை"
என்றேன் நான்.
"உனக்கு உன் கரங்களாலேயே நீ இழைக்கும் தவறுகளுக்கு
நீ பாவநிவர்த்தி கேட்க இயலுமா?"
தன் துயனந சிம்மாசனத்தில் அமர்ந்து கொண்டே
அமைதிப்படுத்தும் பாவத்துடன் மண்ணைச் சுட்டிய அவன் சொன்னான்
"அப்படியல்ல
நன்மை தீமை இரண்டின் தொடக்கமும் ஒன்றுதான்.
நீ தேடுகிறாய், ஆயின் கிடைக்கப் பெறுவதில்லை"
எனவே
நிறைவும் அமைதியும் விழைந்தால் ஆசையினின்று அகல்கிறாய்.
எப்போதும் பசுமையுடன்
அறிதலின் அமைதியுடன்
இருத்தலின் ஒற்றுமையை
மூங்கிலிலும் பைனிலும் பார்.
நீ உன்னை மமதைகளில் பொதிந்துகொண்டு
கவலைகள் எனும் சிலம்பிநூல் வலையைச் சுற்றிக்கொண்டு
கடந்துவிடும் பொருட்களின் கனவு சென்று
இறுதியில் சேர்கிறாய்.
நம்பிக்கை இல்லாத துதி இசை இல்லாத சங்கீதம்:
வெற்றுவெளியின் குறுக்கே சிறகடிக்கும்
தனியொரு வாத்து வரிசை.
மீள்தொகு வட்டத்தைப் பொருள் நோக்கிக் குறுக்கு
ஒன்றுமற்றதற்கு ஒன்றைச் சுமக்கும் வேலை கொண்ட
பயணக் கூடுகளைக் கலைத்துவிடு.
முடிவில்
தொடக்கத்தை அணைத்துக் கொள்ளத் தயாராயிரு. – அகமது அலி

# Tankas out of Time

1.
The top black b//
button your supple fingers
play with on your own
shirt, is a compliment, yes,
yes, to the art of necking.

2.
The top black b//
button on your blouse so
punctuates the neck –
line, a cat's eye glinting there
on the road between the hills.

3.
I was merely ex-
plaining a sentence examples
remaining to the
senses: a starlit night
over the shores of Serendip?

4.
The pink butterfly
settles on my sleeve, and
I try not to move.
The sun too is about to set.
All colours will soon be one.

# காலத்திினின்று வெளிப்பட்ட டன்காக்கள்

1. *முதலில் உள்ள கறுப்புப் பொத்தான்*
*உனது குழைவான விரல்கள்*
*உனது சட்டையுடன் விளையாடுகின்றன.*
*பொத்தான் ஒரு பாராட்டு*
*ஆம், கழுத்திடும் கலைக்கு.*

2. *உனது சோளியின்*
*முதல் கறுப்புப் பொத்தான்*
*குன்றுகளுக் கிடைப்பட்ட சாலையில்*
*ஒரு பூனைக் கண்ணாக ஒளிர்ந்து*
*உனது கழுத்துக்கு வரையிடுகிறது.*

3. *நான் வெறுமனே ஒரு வாக்கியத்தை*
*விளக்கிக் கொண்டிருந்தேன்,*
*உணர்வுகளுக்குப் புரியும் வகையில் உதாரணங்களுடன்,*
*செரன்டிப் கரைகளின்மீது*
*ஒரு வெள்ளி ஒளிர் இரவு போல?*

4. *அடர் இளஞ்சிவப்பு வண்ணத்துப்பூச்சி*
*என் கரம் மீது நிலை கொள்கிறது*
*நான் அசையாமல் இருக்க முயல்கிறேன்*
*சூரியனும் அடைய இருக்கிறது*

5.
You violate the lo-
gic of day and night, infil-
trating my dreams round
the clock. Do come in, but
first take off all that.

6.
Understanding is
So rare, as of the man
who said to his wife
In his Babu Latin: "Please
come quick, I'm getting late."

7.
I don't believe it,
only translate. For belief
will get me into
bed with trouble. I'd rather
be spent without the desire.

8.
You serve an apple-
wine. Your eyes are a sunrise
over the ocean.
We discuss grammar; what keeps
'cra-ving' from'asking for'.

9.
The late wild flowers
Are still lovely in the woods.
I must keep looking
at them to know the meaning
Of desire and that it isn't,

*Alamgir Hashmi*

அனைத்து நிறங்களும் விரைவில் ஒன்றாகிவிடும்

5. நீ இரவு பகலெனும்
மாறாநியதிகளை மீறுகிறாய்
பொழுது முழுதும் என் கனவுகளினுள் ஊடுபரவி
உள்ளேவா,
ஆனால் முதலில் அவற்றையெல்லாம் கழற்றிவிடு.

6. புரிந்துகொள்ளல்
மிகவும் அரிதானது,
பாபு லத்தீனில் தன் மனைவியிடம்
"சீக்கிரம் வா, நான் காலமாகிக்கொண்டிருக்கிறேன்"
என்ற மனிதன் பேச்சு போல.

7. நான் அதை நம்பவில்லை,
மொழி மட்டும் பெயர்க்கிறேன்.
ஏனெனில் நம்பிக்கை என்னைத்
தொல்லையுடன் படுக்கையிடச் செய்துவிடும்.
மேலாக, நான் ஆசையேயில்லாமல் அழியத் தயாராயிருக்கிறேன்

8. நீ ஆப்பிள் மது பரிமாறுகிறாய்
உன் கண்கள்
சமுத்திரத்தின் மீது ஒரு சூரியோதயம்.
யாம் இலக்கணம் அலசுகிறோம்,
"ஏங்குதலுக்கும்" "கேட்டலுக்கும்" என்ன வேறுபாடென்று.

9. வனத்தில்
வாடிய காட்டு மலர்கள் இன்னும் அழகாயுள்ளன.
நான் அவற்றைக் கண்ணுற்றுக் கொண்டிருக்க வேண்டும்,
ஆசையின் பொருளையும் ஆசையின்மையையும்
அறிவதற்கு.

**ஆலம்கிர் ஷஷ்மி**

## Hurricane Lamp

"The Fatality of seeing things too well'

*--Wallace stevens*

Sooner or later
cracks appear on the surface
of things:
clay pitchers, glaciers, human faces.
Water is exempt
and the stone's interior sky.
Jagged edge
of the precipice.
Fire without ashes.

Dreams accumulate
and harden into reality.
Carrion crows
drink from a rain-puddle.
A few steps away
women labourers carry bricks
on their heads.
Each star
drowns in its own light.

***--Daud Kamal***

# அரிக்கேன் விளக்கு

*"எதையும் மிக நன்றாகக் காண்பதன் விளைவு"*

**– வாலஸ் ஸ்டீவன்ஸ்**

*விரைவாகவோ மெதுவாகவோ,*

*பொருட்களின்மேல் கீறல்கள் தோன்றுகின்றன:*

*மட்குடங்கள், பனிப்பாறைகள், மனித முகங்கள்.*

*தண்ணீர் ஒரு விதிவிலக்கு,*

*மற்றும் கல்லினுள்ளிட்ட வானம்*

*செங்குத்துப் பாறையின் ஒழுங்கறு குவட்டுமுனை விளிம்பு,*

*சாம்பலற்ற தீ.*

*கனவுகள் கூட்டிணைந்து*

*நனவுகளாகக் கடினமுறுகின்றன.*

*உயிரறுவுடல் தின்னிக் காகங்கள்*

*மழைக்குட்டையினின்று நீரருந்துகின்றன.*

*சில தப்படிகள் தள்ளிப்*

*பெண் தொழிலாளர்கள்*

*தம் தலையில் செங்கற்கள் சுமக்கின்றனர்.*

*ஒவ்வொரு நட்சத்திரமும்*

*தன் ஒளியிலேயே அமிழ்கிறது.*

***– தவுத் கமால்***

# பொருள் விளக்கவுரைகள்

**தாமரை:**

ஜுனோ: இறைவருக்கு அந்தந்த நாட்டில் வழங்கும் பெயர்களை மொழிமாற்றம் செய்யின் அடையாளம் மாறிப் போகுமாதலால் அவை வடமொழிக் கலப்புடன் அவற்றின் பெயர்களுக்கான ஒலிகளில் தரப் பெற்றுள்ளன.

சைக்கீ: காதல் இறைவி வீனஸின் மகன் மன்மத அம்புடைய க்யூப்பிட்டின் காதலி மற்றும் மனைவி. கிரேக்க மொழியில் சைக்கீ என்பது ஆவி, மூச்சு, வாழ்க்கை, உந்து சக்தி எனப் பொருள்படும்.

**அடிமனத் தொடர்பிணைவு அறிவியல்**

ஹாம்லெட்: ஆங்கில நாடக ஆசிரியர் ஷேக்ஸ்பியரின் நாடகங்களின் ஒன்று. கதை நாயகன் ஹாம்லெட்.

ஏஜியன்: கிரீசு துருக்கி நாடுகளுக்கிடையே விரிந்து நீண்டு கிடக்கும் கடல்.

இலியட்: ட்ரோஜன் போரைக் கதைக்களமாகக் கொண்டு ஹோமரால் இயற்றப் பெற்ற மாகாவியம்.

ஒடிசி: ஒடீசியஸ் ட்ரோஜன் போரில் புரிந்த சாகசங்களைப் புகழ்ந்துபாடும் பண்டைய கிரேக்க காவியம்.

ஹெலனா: மாமன்னன் கான்ஸ்டாடீயஸின் மனைவி ஹெலனா உண்மை சிலுவையின் மீதங்களைக் கண்டெடுத்த பெருமைக்குரியவர். புதிய கண்டுபிடிக்களின் காவல் தெய்வமாகப் போற்றப்படுவர். ஆசியா மைனரின் டிரெப்பநியூமா எனும் இடத்தில் தோன்றியவர். தன் தாயைப் போற்றும் விதமாக ஹெலனாவின் மைந்தன் அந்நகருக்கு ஹெலனா போலீஸ் எனப் பெயர் மாற்றினான்.

**இந்தியப் பெண்கள்**

மிசிசிப்பி: வடஅமெரிக்காவின் மிகப் பெரும் நதி. 3730 கி.மீ. நீளம் கொண்டது.

**பேருந்து**

ஜெஜுரி: புனே மாவட்டத்தில் உள்ள ஒரு நகராட்சி. புகழ்பெற்ற கஹண்டோபச்சி ஜெஹுரீ கோயிலின் இருப்பிடம்.

**புல்லின் வார்த்தைகள்**

நியான்: பெரும் அளவில் நியான் வாயு நிரப்பப்பட்ட விளக்கு. குறைந்த அழுத்தத்தில் பல்வேறு நிறங்களை உருவாக்கும் தன்மையது.

வயலெட்: சிவப்பும் நீலமும் கலந்து உருவான அழகிய மலர்.

**ஆஸ்திரேலியா**

சிபிங்ஸ்: கிரேக்கப் புராணங்களில் காணப்பெறும் உயிரினம் மனிதப் பெண்ணின் தலையுடன் கூடிய பெண் சிங்க உருவம். எகிப்தில் கீஸாவின் க்காப்ரே பிரமிடின் முன்னால் ஒரு மாபெரும் ஸ்பிங்ஸ் சிலை உள்ளது.

பெர்த்: ஆஸ்திரேலியாவின் தலைநகர்.

கெய்ர்ன்ஸ்: ஆஸ்திரேலியாவின் கடை வட குயின்ஸ்லாண்டில் உள்ள ஒரு மத முக்கியத்துவம் பெற்ற நகரம்.

**என் தேசத்திற்கு என் ஆசை**

பியானோ: ஆர்மோனியம் போன்ற மேலை நாட்டு இசைக் கருவி.

டென்னிசன்: ஓர் ஆங்கிலக் கவி.

இரு சகோதரிகள்:

கோஅன்னா: ஆஸ்திரேலியாவின் இராட்சசப் பல்லி மனித நாகரிகத்திற்கு முற்பட்ட பூர்வ குடி மனிதர்களின் புராணங்களிலும், ஆஸ்திரேலிய கிராமிய இலக்கியங்களிலும் காணப் பெறுகிறது. ஆதி உயிர்.

ரன்ங்கா: கோஅன்னா ரன்ங்க ஆகிய வார்த்தைகளுக்கு சரியான ஒற்றை தமிழ்ச் சொற்கள் இன்மையால் இங்கு ஒலி எழுதப்பட்டுள்ளது.

ரன்ங்கா: அதிபுனிதப் பொருட்கள்.

**ஆப்பிரிக்கா**

சவானா: கண்ணுக்கு எட்டிய தூரம் வரை சிறுமரங்கள் இடையிடையிட்ட புல் அடர்ந்த காடுகள்.

இராகோ: ஆப்பிரிக்க தேக்கு மரம்; நாணிட்ட இசைக் கருவிகள் செய்தற்கு உகந்த மரம்.

**கனடா:**

**ஒரு ஒற்றை விறகு வெட்டி:**

ஃபிர் அய்ரோப்பிய மலை பகுதிகளில் உள்ள உயர்ந்த மரம்.

பிர்ச்சு: வலிய காட்டு மரம்.

கார்னல்: தென் அய்ரோப்பாவை சேர்ந்த சிறு மர வகை

மேப்பிள்: ஆசிய, அய்ரோப்பா, ஆப்பிரிக்கா நாடுகளில் காணப்படும் சிவப்பழகு மரம்.

நீல பெர்ரி: விதைகள் உள்ள ஒரு தீங்கனி.

ரோவன்: விறகு போன்ற இலைகளையும் சிவப்பு பழங்களையும் கொண்ட மர வகை.

நீல ஜே: நீல வண்ண சிறகையுடைய சலசலக்கும் அய்ரோப்பிய பறவை.

லூனின்: நீர் வாழ் பறவை வகை.

பேட்ரிஜ்: வேகம் நிறைந்த அய்ரோப்பிய பறவை.

**ஹென்றி மூரை ஆராயும்பொழுது:**

நார்சிசசு: கிரேக்கப் புராணக் கதாபாத்திரம் போட்டியாவில் உள்ள திஸ்பியா என்ற பகுதியை சேர்ந்த பேரழகுக்கு பெயர் பெற்ற ஒரு வேடன். தன்மீது காதல் கொண்டவர்களை மதிக்காமல் ஒதுக்கினான். தெய்வம் தந்த தண்டனையாக குளத்து நீரில் கண்ட தன் உருவத்தின் மீதோ தீர காதல் கொண்டான் அது தன் நிழல்தான் என்பதை அறிந்து கொள்ளாமல் ஏங்கி வீணாகி இறந்தான்.

**பன்றித் தீவு மடல்கள்**

அவன் மன்னன், தலைவன் ஆகியன தமிழில் வார்த்தையின் தலையெழுத் அளவில் பெரிதாக எழுதப்படுவதில்லை என்பதால் சாதாரணமாக வழங்கப் பெற்றுள்ளன.

Him அவன்

King மன்னன்

Master தலைவன்

**தபால்காரன்**

To God கடவுளுக்கு - தமிழ் எழுத்து வடிவில் வாக்கியங்களுக்கு இடையே தலைப்பு எழுத்து கொண்டு எதனையும் எழுதுதல் இல்லை. மேலும் ஆங்கிலத்தில் G எனும் பெரிய எழுத்தில் எழுதப்பட்டுள்ளது தமிழில் கடவுளுக்கு என்று எழுதப்பட்டாலே உரிய பொருள் தரும் என்பதால் வேறு செயல் முறை முயற்சி எதுமின்றி கடவுள் என்று மட்டுமே குறிக்கப் பெறுகிறது.

He தமிழிலும் "அவன்" என்று இறைவன் குறிக்கப் பெற்றாலும் இடம் பொருள் ஏவலில் மட்டுமே 'அவன்' கடவுளாகப் புரிய பெறும். ஆண்டவன் எனல் உடனடியாக மற்றும் மூலத்தில் உணரப்பட்ட நிலையில் தரும் என்பதால் அவ்வாறு தரப்பட்டுள்ளது.

**பத்தாவது நிலவின் பத்தாவது இரவில்**

லீ போ: சீனப் பெருங்கவி. சீன கவிதையின் பொற்காலமாகப் போற்றப் பெறும் ட்டேங் காலத்தியவர். "மதுக் கோப்பையின் இரப்பற்ற எண்மரில் ஒருவர்.

**லீ சேனுடன் உரையாடல்**

லீசேன்: ஜோசியரின் வம்சத்தின் 22வது அரசன் ஜுங் ஜோ. தற்காப்புக் கலைக்கு முக்கியத்துவம் வழங்கி முதல் தற்காப்பு நூலை எழுதியவர். பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு பிறவித் தலைவன்.

# கவிஞர்கள் குறிப்பு



தோருதத் : பிறப்பிடம்: கல்கத்தா, இந்தியா 4.3.1856 - 30.8.1877 ஐரோப்பாவிற்க்கு குடிபெயர்ந்த கிருஸ்தவ குடும்பம் பரிரான்ஸ் இங்கிலாந்திலும் கல்வி,



அரவிந்தர் : இயற்பெயர் அரவிந்த கோஸ் பிறப்பிடம் கல்கத்தா இந்தியா 15.8.1872 - 5.12.1950 இந்திய சுதந்திர போராலர் இங்கிலாந்து நாட்டில் கல்வி கிரேக்கம், இலத்தின் ஏனைய மொழிகள் கற்றவர்,



சரோஜினி நாயுடு : பிறப்பு ஹைதராபாத் இந்தியா சென்னைப் பல்கலைக்கழகத்தில் மெட்ரிகுலேசன் தேர்வு, இங்கிலாந்தில் மேற்கல்வி.



ஷிவ்.கே. குமார் : பிறப்பிடம் லாகூர் 1921 மேற்படிப்பு கேம்பிரிட் பல்கலைக்கழகம் பிரிட்டன் மற்றும் அமெரிக்க பல்கலைகக்ழகத்தில் பேராசிரியர் பணி, சாகித்திய அகாதமி மற்றும் பத்மபூசன் விருது.



அருண் கொலாட்கர் : பிறப்பு கோலாப்பூர் மகாராஸ்டா 1.11.1922 - 25.9.2004 சாகித்திய அகாதமி விருது காமன்வெல்த் எழுத்தாளர் பரிசு.



கமலா தாஸ் : பிற்காலத்தில் கமலா சுரையா பிறப்பிடம் புன்னையுங்குளம் கேரளா 31.3.1934 - 31.5.2005 சாகித்திய அகாதமி விருது, அசன் உலகப் பரிசு,ஆசிய கவிதை பரிசு கென்ட் விருது.



கோபால் ஹோன்னல்கெரெ : பிறப்பு: 1943, இந்தியா



ஷா நெய்ல்சன் : பெனோலா, தெற்கு ஆஸ்திரேலியா 2.2.872-12.5.1942 ஆஸ்திரேலிய மண்ணின் மைந்தர் கழக இளையோர் பரிசினை இவர் வென்ற பொழுது அதன் முத்தோர் பரிசை இவர் தந்தைக்கு வழங்கப்பட்டது.



ஏ.டி.ஹோப் : பிறப்பிடம் கூமா நியூ சவுத்வேல்ஸ்,



ஜீடித் ரைட் : பிறப்பிடம் ஆர்மிடேல்ஸ் நயூ சவுத்வேல்ஸ் 31.5.1915 - 26.6.2000. மனித உரிமைகள் மற்றும் சரிசம வாய்ப்புக்குழவின் கவிதை விருது.

ஜேம்ஸ் மெக்ஆலே : பிறப்பிடம் லக்கேம்பா, சிட்னி, 12.10.1917 - 15.10.1976

வின்செண்ட் பக்ளி : பி. ரோம்சே, விக்டோரியா 1925 - 1988 கிறிஸ்டோபர் பென்னன் விருது,

புருஸ் பீவர் : பி,மான்லி நயூ சவுத் வேல்ஸ் 14.2.1928 - 17.2.2004 கிரேஸ் லீவன், பேட்ரிக் ஒயிட் நியூ சவுத் வேல்ஸ் இலக்கிய விருது சி,ஜே டென்னிஸ் கவிதை விருது,

ரன்டோல் ஸ்டோ : பி, ஜெரால்டன் மேற்கு ஆஸ்திரேலியா பேட்ரிக் ஒயிட் விருது.

பெர்னார்ட் பி,டேடீ : பி. அபிட்ஜான் , கோட்டி ஜவரி 1916

ரேப்ரிவெலோ : பி.டனானாரிவே மடகாஸ்கர் 4.3.1901 - 23.6.1937

கேப்ரியல் ஒகாரா : பி. பொமேளன்டி நைஜீரியா 24.4.1921



செகேயே காப்ரி மெதின் : பி. போடா. எத்தியோப்பியா 17.8.1936 - 25.2.2006. எத்தியோப்பிய கவிதை பரிசு.



பிராகோ டியோப் : பி. டாக்கர் பிரஞ்சு மேற்கு ஆப்ரிக்கா 1906-1989



ஜான் பெப்பர் கிளார்க் : பி. கியாபோடோ நைஜீரியா 6.4.1935



டேவிட் டியோப் : பி. போர்தோ பரிான்ஸ் தாய் காமருன் தந்தை செனகல் நாட்டவர் 1927 - 1960.



சர் சார்லஸ் ஜி.டி. இராபர்ட் : பி. டகள்ஸ் 10.1.1860-26.11.1943 சர் பட்டம் 1935.



ராபர்ட் பின்ச் : பி. ஃபிரீபோர்ட் நியூயார்க் 14.5.1900 - 11.6.1995



டாரதி லிவ்சே : பி. 12.10.1909 - 29.12.19967



எட்வர்ட் பிராத்வெய்ட் : பி. 11.5.1930 பூஸா விருது



டெரக் வால்காட் : பி. காஸ்ட்ரீஸ் செயின்ட் லூசியா 23.1.1930 - 1992



ஷர்லி லிம் : பி. மலாகா மலேசியா

ஈ.ஈ.டியாங்காங் :பி. சிங்கப்பூர் 1933-1990



எட்வின் தம்பு : பி. சிங்கபூர் 22.11.1933

கிர்பால் சிங் : பி. சிங்கப்பூர் 1949 காமன்வெல்த் எழுத்தாளர் பரிசு



ஜீன் அரசநாயகம் : பி. கண்டி ஸ்ரீலங்கா



கேத்தரின் மேன்ஸ் பீல்டு : பி வெலிங்டன் 4.10.1888 - 9.1.1923



ஏ.ஆர்.டி. பேர்பன் : பி ஆக்லாந்து 2.2.1904 - 25.3.1957

ஆலன் கர்னவ் :



ஜேம்ஸ் பாக்ஸ்டர் : பி. டுனடின் 29.6.1926 - 22.10.1972



கார்டன் சேர்லிஸ் : பி.வேல்ஸ் எம்பிரேட்



கிஷ்வர் நகித் : பி. புலன் சேல் பாக்கிஸ்தான 1940



பைஸ் அகமது பைஸ் : பி. சியால் கோர்ட் 1911 - 1984
சோவியத் யூனியனின் லெனின் பரிசு

பஹ்மியாத் ரியாஸ் : பி. மீரட் 28.7.1946

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | 30.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 95.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 550.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| நவீன நாடகங்களும் ஊடகங்களும் | **50.00** |
| மொழிபெயர்ப்பு ஒரு கவின் கலை | **75.00** |
| மனிதப் புனிதர் கக்கன் | **110.00** |
| மூவர் தமிழ் - மூன்று பார்வைகள் | **50.00** |

---

**670 காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் 100.00**